ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம: 

# விஷ்ணு ஸ்தல மஞ்சரி.

## முதற்பாகம்.

இது

ஸ்ரீமத் உபய வேதாந்தேத்யாதி,

ஸ்ரீமான் ஆசூரி - வேங்கடாசாரிய சுவாமிகள்

திருவடிசம்பந்தியும்,

ஸ்ரீவைஷ்ணவ பாதரேணுவாகிய

டாக்டர். ம. கோ. இராமசாமி முதலியார்

குமாரருமாகிய

மயிலை - கொ. பட்டாபிராம முதலியாரால்

இயற்றப்பட்டு.

சென்னை:

டி. வி. வி. அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1925.



[விலை அணா 12.

# இரண்டாவது பதிப்பின்

# முகவுரை.

---

இச்சிறு புஸ்தகம் இரண்டாவது பதிப்பிற்குவந்ததைப் பற்றி சந்தோஷமடைவதன்றி இதை ஆதரித்த சைவ வைஷ்ணவர்களுக்கு என்றும் வந்தனமுள்ளவனாக இருக்கிறேன். முதற்பதிப்பின் முகவுரையில் சொன்னபடி விட்டுப்போயிருந்த சில திருப்பதிகளையும் சென்று சேவிக்கும் பாக்கியம் பெற்றேன். முப்பது வருஷகாலமாக அல்லும் பகலும் அகலாது என்னுடன்கூடவிருந்து பல துறைகளிலும் அறிவூட்டிய சுதேசமித்திரன் முதற்பதிப்பு புத்தகத்தின் மதிப்புரையில் "விஷ்ணுஸ்தலங்களுக்கு அருகாமையிலுள்ள சிவஸ்தலங்களையும் ஆசிரியர் ஆங்காங்கு குறிப்பிட்டிருந்தால் யாவரும் இந்நூலை ஆர்வமுடன் வாங்கிப்படித்துப் பயன் பெறக் கூடுமென்று சொல்லத்தகும்" என்று கூறியுள்ளமையால் அவ்வாறே அந்த யோசனைக்கிணங்கி விஷ்ணு ஸ்தலங்களுக்கு அருகாமையிலுள்ள சிவஸ்தலங்களையும் ஆங்காங்கு குறிப்பிட்டிருக்கிறேன். தவிரவும் கும்பகோணம், மதுரை, திருவநந்தபுரம் முதலான பட்டணங்களின் விஷயங்களைப் பற்றியும் சில விசேஷ குறிப்புகள் எழுதியிருக்கிறேன். இவ்விஷயங்களும் இன்னும் சில விஷயங்களும் சேர்க்கப்பட்டிருக்கிறபடியால் இச்சிறுபுத்தகம் பருத்ததைப்பற்றி இரண்டு பாகங்களாகப்பிரித்து ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றுள்ள நூற்றெட்டுத் திருப்பதிகளும் அவற்றிற்குவேண்டிய சகல விஷயங்களும் முதற்பாகத்திலும், இரண்டாவது பாகத்தில் மங்களாசாஸனம் பெறாத புராண

ஸ்தலங்களும், ஆழ்வாராதிகள் அவதரித்த ஸ்தலங்களும் நதி, தீர்த்தங்களும், பெரிய பட்டணங்களும், அவைகளுக்கு வேண்டிய முழுவிவரங்களும் விசதமாய் எழுதியிருக்கிறேன் இதனுடன் சிவஸ்தலங்களின், ஸ்டேஷன், ஸ்தலம், மைல் காட்டும்பட்டி ஒன்றும் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இதிற் காணும் குற்றங் குறைகளைப் பாராட்டாது குணத்தையே கொள்ளவேண்டுமென்று பெரியோர்களைக் கேட்டுக்கொள்ளு கிறேன்.

1—5—25 ம. கோ. பட்டாபிராமன்

---

## முதற்பதிப்பின் முகவுரை.

ஸ்ரீயஃபதியாய் ஸ்ரீவைகுண்ட நிகேதனனாய் அவாப்த சமஸ்தகாமனாய் அனந்த கல்யாணகுணகண நிதியான ஸ்ரீமந் நாராயணன் தனது பரம க்ருபையாலே சேதனோஜ்ஜீவனார்த் தம் இவ்விருள் தருமாஞாலத்தில் அர்ச்சாவதாரமாக எழுந் தருளியிருக்கும், ஸ்தலங்கள் பலவுள. அவற்றுள் மயர்வற மதி நலமருளப் பெற்ற ஆழ்வார்களின் மங்களாசாஸனம் வாய்ந்த திருப்பதிகள் அரங்கமுதல் வைகுந்த நாடளவும் நூற்றெட்டாம். இவற்றைச்கு முன்னரே ஆன்றோரால் பிர பாவங்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றோடு புராண பிர சித்தமாயிருப்பனவும் ஆழ்வார்கள், ஆசாரியர்கள், அவதரித் தனவுமான மற்ற ஸ்தலங்கள், ஐம்பது ஸ்தலங்களின், ஸ்தா னீகர்களை விசாரித்தும் ஸ்தல புராணங்களை ஆராய்ந்தும் அறிந்த, பிரபாவங்களும், இந்நூலில் எழுதிச் சேர்க்கப்பட் டிருக்கின்றன. இத்தலங்களுக்கு யாத்திரை செய்வோர், ஏற வேண்டிய ரெயில்வே, இறங்கவேண்டிய ரெயில்வே ஸ்டே

ஷன், ஸ்டேஷனுக்கும் பிரதி ஸ்தலத்துக்கு முள்ள தூரம் திசை, மார்க்கம், தங்கவேண்டிய இடங்கள், சத்திரம், போஜன சாலே, முதலிய சகல செளகரியங்களும், இதில் விசாலமாய் விவரிக்கப்பட்டுள்ளன.

இச்சிறு புத்தகம் இயற்றுதற்குக் காரணம் வருமாறு: சில வருஷங்களுக்கு முன்னர், திவ்ய தேசங்களில் அரு ளூருக் கொண்டுறையும் எம்பெருமான்களே சேவிக்கவேண்டு மென்று அடியேனுக்கு ஒரு ஸங்கல்பமுண்டாயது. ஐந்து (1908-1913) வருஷங்களுக்குள், அடியேனுக்குக் கிடைத்த உத்தியோக விடுமுறைகளில் அவ்வியாத்திரை சித்தித்தது. வடநாட்டில் சில திருப்பதிகள் தவிர மற்றெல்லாத் திருப் பதிகளேயும் ஒருமுறை சேவித்துக் கலி தீர்ந்தேன். உசாத் துணை முதலிய செளகரியங்கள் வாய்க்கப் பெறுமைபால், மென்மேலும் யாத்திரை செய்வதற்கு ஏலாதாயிற்று. அடி யேன் புரிந்த யாத்திரையில் கண்ட, கேட்ட விஷயங்களே அப்போதைக்கப்போது எழுதிவைத்திருந்தேன். அவ்விஷயக் குறிப்புகளேக் கண்ணுற்ற சில பாகவதர்கள் அவற்றை யோர் புத்தக ரூபமாய், அச்சியற்றல் லோகோபகாரமா யிருக்கு மென்றனர். அது கருதி அடியேன் பிரதி ஸ்தலத் தின் புராணவரலாறு, உற்சவகாலங்கள், அதன் மார்க்கம், வசதிகள், விநோத இயற்கை செயற்கை காக்ஷிகளாகிய குறிப் புகளோடு சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு ஆங்காங்கு சம்ப்ர தாய விஷயங்களும், பூகோள விஷயங்களும், அவ்வத்தேச சரித்திரங்களும், யாத்ரிகர் அறியவேண்டிய மற்றும் சில விஷயங்களும் அதில் சேர்த்து எழுதப்பட்டுள்ளன. இவ்வி ஷயத்திரட்டைக் கடைக் கணித்த அடியேனது தமையனார், ஸ்ரீமான், ம. கொ. விஜயராகவ முதலியா ரவர்கள் அதற்கு "திவ்யதேச யாத்திரானுகூலன்" என்று பெயரிட்டு, அதை

அச்சியிற்றவெண்ணி யிருந்தனர். அவர் அடியேன் தூர்ப் பாக்கியத்தால் (12-1-14) பரமபத மடைந்தனர். அவர் ஞாபகார்த்தமாக அந்நூலினின்றும் பிரபாவம், மார்க்கம், வசதிகள் என்ற மூன்று விஷயங்களை மட்டும் யெடுத்து "விஷ்ணுஸ்தல மஞ்சரி" என்று பெயர் புனைந்து இப்புத்த கத்தை வெளியிடலானேன். இவ்வரிய பெரிய காரியஞ்செய் யவல்லே னல்லேனுபினும் பெரியோர் நியமனம்பற்றி அடியேன் இப்பணியைக் கைக்கொண்டேன். "ஒருகுறி கேட்போனிருகாற் கேட்பின், பெருக நூலிற் பிழைபாடிலனே, முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்." என்றபடி மும்முறை செய்யாது ஒரு முறையே யாத்திரைசெய்து எழுதப் பட்டதொன்றுகையால், இதிற் சில பல வழுஉக்களிருக்கலாம். குற்றங்குறைகளைப் பாராட்டாது குணத்தையே கொள்ளவேண்டுமென்று பெரியோர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். குற்றங்களையும் குறைகளையும் எவரேனும் தயை கூர்ந்து அடியேனுக்குத் தெரிவித்தாராகில் வந்தனத்துடன் அவற்றைப் பெற்றுக்கொள்வேனுகவும். இந்நூலின் மறு பதிப்பும் அச்சிடவிருக்கும் தெலுங்கு மொழி பெயர்ப்பும் சுத்தப்ரதியாக வருவதற்கும் அவை யுதவுமென்றும் அறியற்பாலது.

இஙங்னம்,

மயிலாப்பூர் பத்தர்பதப்பொடி,

15—10—15. மயிலை-கொ. பட்டாபிராமன்.

# மதிப்புரை.

ஸ்ரீ. உ. வே. வித்வான், பெருமாள்கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகள் எழுதியது.

சென்னை தங்கசாலைவீதி, 210-வது மாளிகையிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ ம-கொ. பட்டாபிராம முதலியாரவர்கள் இயற்றி அச்சிடுவிக்கப்பட்ட "விஷ்ணுஸ்தல மஞ்சரி" என்னும் ஓர் புத்தகம் இன்று எமதுகட்புலனுக்கு இலக்காயிற்று. இப்புத்தகம்சிறந்த காகிதத்தில் உயர்ந்த தமிழ்லிபியில் பிழையற வெகு நேர்த்தியாக அச்சிடுவிக்கப்பட்டுள்ளது. இதனை யாம் சுமார் ஒரு யாமகாலத்திற் படித்து முடித்தோம். எம்பெருமான் ஸம்ஸாரிசேதந ஸம் ரக்ஷணார்த்தமாக அர்ச்சாரூபங்கொண்டு எழுந்தருளியிருக்கும் திவ்யஸ்தலங்களனைத்தையும் நெடுநாள் வருந்தியலைந்துழன்று ஸேவிக்கப்பெற்றவனுக்குப்பிறக்கக்கூடிய பேரின்ப வெள்ளத்தைப் பதின்மடங்காக ஒரு நொடிப்பொழுதில் யான்பெற்றேன். இப்புத்தகத்தைப் படித்ததனால்-என்றவிது கவிஸமயஸரணிக்கேற்றதோர் அதிசயோக்தி அன்று. இப்புத்தகத்திலுள்ள விஷயம்யாதெனின்: இந்த லீலா விபூதியின் கண் இன்புறு மிவ்விளையாட்டுடையானான எம்பெருமான் ஸாந்நித்யம் செய்தருளியிருக்கும் திவ்யதேசங்கள் பலவகைப்படும்; ஆழ்வார்கள் மங்களாசாஸநம் செய்தருளப்பெற்ற திருப்பதிகள், ஆசாரியர்கள் உகந்தருளின திருப்பதிகள் ஆழ்வாராசாரியர்கள் அவதரித்த திருப்பதிகள், புராணங்களில் பரமரிஷிகளால் பரம புண்யஸ்தலமாகக் கொண்டாடப்பெற்ற திவ்ய ஸ்தலங்கள், தீர்த்த விசேஷங்கள், நதி விசேஷங்கள் என்றிப்படி பலவகைப்பட்டுள. இவற்றுள் "ஈரிருபதாஞ் சோழமீரொன்பதாம் பாண்டி, ஓர் பதின்மூன்றும் மலைநாடோரிரண்டாம், சீர்நடு

நாடாறேழ்வரெட்டு தொண்டை யவ்வட நாடாறிரண்டு, கூறு திரு நாடொன்றாக்கொள்" என்ற ஐயங்கார் பாசுரத்தின்படி ஆழ்வார்கள் உகந்தருளின திருப்பதிகள் நூற்றெட்டென்று மாத்திரம் பெரும் பான்மையாகப் பல ஸ்ரீ வைஷ்ணவர்களு மறிவர்களேயன்றி அவற்றின் திருநாமங்களை உணர்ந்தவர்கள் மிகச் சிறுபான்மையரே என்பது எமது துணிபு. அன்றியும் அத்திருப்பதிகளைச்சென்று முழுதும் சேவிக்கப்பெற்றவர்கள் ஒருவரிருவர் இருப்பரோ, இலரோ ஸந்தேஹமே.

இனி, ஆசாரியர்கள் உகந்தருளின திருப்பதிகளாகிய திருநாராயணபுரம், ராஜமன்னார்கோயில் முதலியனவும் ஆழ்வாராசாரியர்களவதரித்த திருப்பதிகளாகிய திருமயிலை, திருமழிசை, ஸ்ரீபெரும்பூதூர் முதலியனவும், ஸ்ரீமுஷ்ணம், ஸ்ரீகூர்மம், ஸிம்ஹாசலம் முதலிய புராணக்ஷேத்திரங்களும் புஷ்கரம் முதலிய தீர்த்த ஸ்தல விசேஷங்களும் கங்கை முதலிய நதி விசேஷங்களும் இங்ஙனம் அளவற்ற புண்ய ஸ்தானங்களை இவ்வரிய மானிடப் பிறவியைப் பெற்றோர்களும் ஸேவிக்கப் பெறாதொழிந்தனரேல் எம்பெருமானுடைய அர்ச்சாவதார ப்ரயாஸங்கள் என்ன பயன்பெற்றனவாம். இத்திருப்பதிகளை எல்லாம் அகிஞ்சன ஜனங்கள் ஸேவியாதொழிவது வியக்கத் தக்கதன்றேனும் மஹாதநிகர்களும் ஸேவியா தொழிவது ஒரு காரணம் பற்றியே; அது யாதெனின் மேற்கூறிய ஸ்தலங்கள் யாவும் ஓரிடத்திலில்லாமல் மருகாந்தரங்களிலும் மலைப்ராந்தங்களிலும் இன்னுங் கிட்டுதற்கரிய பலவிடங்களிலுமிருக்கின்றமையால் அவற்றினிருப்பிடமும் அவற்றைக்கிட்டும் வழியும் வஸதி முதலிய சௌகரியங்களும் நன்கு தெரியாமையேயன்றி வேறில்லை. மலையாளத் திருப்பதிகள் பலவும் கடலினுள் அழுந்திவிட்டனவென்று பலர் சொல்லிக்கொண்டிருக்கக் கேட்டிருக்கி

ரேம். இப்படி அஜ்ஞாந அந்யதாஜ்ஞாநங்களாலே பக வத் ஸேவையை இழந்து வாழ்நாளைப் பாழே கழிக்கின்ற மனிதர்களின் நிலைமையைக்கண்டு மிகவும் இரக்கமுள்ள ஷை முதலியாரவர்கள் வாசாமகோசரமாகப் பரிச்ரமப்பட்டு ஸகல திவ்யதேசங்களுடையவும் பிரபாவம், மார்க்கம் வஸதி முதலிய சகல விஷயங்களையும் போதுமான விவரத்துடன் எழுதி அச்சிட்டு வெளியிட்ட இம்மஹோபகாரத்திற்கு அதிற்கண்டபடி ஸகல திருப்பதிகளையுஞ்சென்று சேவித்து வாழ்கை யொழிய வேறொரு கைம்மாறில்லை. அரிய பெரிய தமிழ்த் திவ்வியப் பிரபந்தங்களை அருளிச் செய்தரு ளின ஆழ்வார்களின் உபகாரத்திற்காட்டிலும் நமது முதலி யாரவர்களுடைய உபகாரம் மிகப் பெரியதென்பதை யாம் எங்ஙனே வெளியிடாதிருக்கவல்லோம். திவ்ய தேசங்களிற் சென்று ஸேவிக்க வல்லமையற்றவர்கள் இந்த விஷ்ணுஸ்தல மஞ்சரியைப் பாராயணஞ் செய்தால் ஸகலதிவ்ய தேச யாத்ரா பலன் கையிலங்கு நெல்லிக்கனியாமென்பது ஐயந் திரிபற்ற அருஞ்சொல்லாகும். இவ்வளவாக யாம் எழுதிய வற்றில் ஓரக்ஷரமும் அதிசயோக்தியன்றென்பதற்கு எம்மன மும் அம்மனக்கடலில் வாழவல்லமாயமணாள நம்பியுமே சாக்ஷியாகக்கூடும்.

இங்ஙனம்

பெருமாள்கோயில், பிரதிவாதி பயங்காம்

அண்ணங்கராசாரியர்.

5-12-17.

---

திவான்பகதூர் டி. டி. ரங்காசாரியர். பி. எ. பி. யல்

வேதாந்த தீபிகை-பத்திராதிபர்.

# வேதாந்த தீபிகை.

ஸ்புடம் 6.] நளஹு வைகாசிமீ [ஸஞ்சிகை 4.

விஷ்ணுஸ்தல மஞ்சரி:—இப்பெயர்கொண்ட புஸ்தகமொன்று ம-ா-ா-ஸ்ரீ மயிலே. கொ. பட்டாபிராம முதலியார் அவர்களால் இயற்றப்பட்டு நம்பார்வைக்கு அனுப்பப்பட்டது. இது ஆஸ்திகராய் நிற்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு மிகுந்த உபகாரம் செய்யத்தக்கது. பகவான் அர்ச்சாரூபியாக எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசங்களின் நாமங்களே பலர்க்குத் தெரிவதில்லை. ஆதலால் ஒவ்வொரு ஸ்தலத்தின் ப்ரபாவமும் அதற்கு மார்க்க சௌகரியங்களும் யாத்திரை செய்பவர்களுக்குத் தெரிய வேண்டிய சர்வாம்சங்களின் விவரணமும் விஷ்ணுஸ்தல மஞ்சரியில் விசேஷமாக வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. யாத்திரை செய்ய அசக்தராயிருக்கும் பாகவதர்களும் இந்நூலைப் படித்துக் களிப்படையப் பொருந்தும். ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளில் விசேஷ ஜ்ஞானம் பெற்றவர் பலருளர். அவர்க்குள் முதலியாரவர்கள் ஜ்ஞானமானது லோகோபகார நிமித்தமாக பிரயோஜனப்பட்டது. திருப்பதி-ஸ்தல விமர்சம் எனப்பட்ட விஷயம் திராவிடபாஷையில் க்ரந்தகர்த்தாவினுடைய விசேஷ ப்ரஜ்ஞையை ஆவிஷ்கரிக்கின்றதுமன்றி அந்த ஸ்தல சம்பந்தமாகச் சில மந்தமதிகளால் ப்ரமிக்கப்பட்டபடியே யாம் கேள்விப்பட்ட துரூஹங்கட்குத் தக்க ஸமாதானத்தையும் அளிக்கின்றது.

## சுதேசமித்திரன்.

21—3—16.

விஷ்ணுஸ்தல மஞ்சரி:—இப்பெயர்பூண்ட அரிய நூலொன்று வரப்பெற்றோம். சென்னை பெரம்பூர் லோகோ ஆபீஸ் குமஸ்தாவான மிஸ்டர் பட்டாபிராம முதலியார் இந்நூலை இயற்றியவராவர். ஆழ்வாராதிகளால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகள் புராண ஸ்தலங்கள் அவை சம்பந்தமான சரித்திரக் குறிப்புகள், ஆகிய பலவிபரங்களும் இனியதமிழ் நடையில் யெழுதப்பெற்றிருப்பதோடு, திவ்விய ஸ்தலங்களுக்கு அருகேயுள்ள ரயில்வே ஸ்டேஷன்கள் புராதனமான கட்டிடங்கள் முதலிய பலவும் நன்கு குறிக்கப்பட்டுள்ளன. நூலாசிரியரே நேரில் சென்று பல ஸ்தலங்களையும் கண்டானந்தித்து ஒவ்வொரு க்ஷேத்திரத்தைப்பற்றிய குறிப்புகளைக் கூடியவறையில் விளக்கியிருப்பது ஒரு விசேஷமாகும். ஆதலின் திவ்யக்ஷேத்திர யாத்திரிகர்கட்கும் தேச சஞ்சாரிகளுக்கும் இந்நூல் வழிகாட்டி போலாகுமென்பதில் ஐயமில்லை. விஷ்ணுஸ்தலங்களுக்கு அருகாமையிலுள்ள சிவஸ்தலங்களையும் ஆசிரியர் ஆங்காங்கு குறிப்பிட்டிருந்தால், யாவரும் இந்நூலை ஆர்வமுடன் வாங்கிப்படித்துப் பயன்பெறக்கூடுமென்று சொல்லுதல் தகும்.

---

## வித்தியாபாநு.

9—12—15.

விஷ்ணுஸ்தல மஞ்சரி:—விஷ்ணுஸ்தல விஷமாய்ச் சென்ற பானுவில் ஒரு புத்தகத்தைப்பற்றி எழுதினோம். மற்றொரு புத்தகம் அதே விஷயமாக நம் கைக்கெட்டி யிருக்கிறது. அதனை அனுப்பியவர்கள் ஸ்ரீமான், ம.கொ. பட்டாபி

ராமமுதலியார் அவர்கள். இப்புத்தகத்தையும் அகமகிழ்ந்து ஏற்கின்றோம், இது டெமி 112 பக்கங்கள் கொண்டது. மிகவும் சுத்தமாகவும் அழகாகவும் அச்சிடப்பட்டிருக்கின்றது. முன்னே முளைத்தகாதைப் பார்க்கிலும் பின்னே முளைத்த கொம்புறுகி" என்ற வண்ணம் இப்புத்தகம் இதற்குமுன் விஷ்ணுஸ்தல விஷமாய் ஏற்பட்டிருக்கிற இரண்டு புத்தகங்களினும் சிறந்ததாக இருக்கின்றது. 108 திருப்பதிகளுக்கும் யாத்திரை செய்யவேண்டுவோருக்கு இப்புத்தகம் பேருதவியாக இருக்குமென்பது திண்ணம். இதனை எழுதியவர் தாமே பல ஸ்தலங்களுக்கும் யாத்திரை செய்து ஒவ்வொரு ஸ்தலத்திலும் ஸ்தானிகர்களைக்கண்டு விசாரித்துக் குறித்த விஷயங்களையும் பௌராணிகர்ளிடமிருந்து புராண சம்பந்தமான அரிய விஷயங்களை அறிந்து குறித்த விஷயங்களையும் நன்கு எடுத்து விளக்கியிருப்பதுமன்றி புறப்படவேண்டிய ரயில்வே ஸ்டேஷன் இறங்கவேண்டிய ஸ்டேஷன் திசை, மார்க்கம், தங்கவேண்டிய இடங்கள் சத்திரம் போஜனசாலை முதலிய சகல சௌகரியங்களையும் யாத்திரிகர்கள் எளிதில் உணரும்படி தெளிவாய் விளக்கியிருக்கின்றார் புராண ஸ்தலங்கள் 52-ஐயும் பற்றிய விவரங்களையும் 108 திருப்பதிகளின் மங்களாசாஸன பாசுரத்திரட்டும் ஆழ்வார் மங்களாசாஸன விஷயமாய் மூன்று முக்கிய அநுபந்தங்களும் சேர்க்கப்பட்டிருப்பதுடன் ரெயில்வே ஸ்டேஷன் சம்பந்தமான விவரங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.



ஸ்ரீ

## THE MADRAS MAIL,

FEBRUARY, 11, 1916.

Mr. M. C. Pattabhirama Mudaliar, clerk. Loco Suprintendent's Office, M. &, S. M. Railway, is the author of a very useful little book entitled "The Vaishnavite Pilgrim's Manual" in Tamil. He has collected the traditional accounts of the religious origin of the 108 pilgrim centres in India largely resorted to by Vaishnavas. He also gives many useful hints to pilgrims and extracts from the sacred literature in praise of the holiness of these religious centres.

---

## NEW INDIA,

FEBRUARY, 23, 1916.

A useful book to worshippers of Vishnu, THE VAISHNAVITE PILGRIM'S MANUAL in Tamil. The author has visited several of the one hundred and eight places in India in which the image of Vishnu is consecrated, and he gives full particulars as to how they may be got at, An Account of fifty other sacred places which are mentioned in old Puranas is added to the book. It is priced As. 8 and can be had from the author, Mr. M. C. Pattabhirama Mudaliyar, Secretary, Sri Peyalwar Bakta Jana Sabha, Mylapore.

---

ஸ்ரீ

# விஷ்ணுஸ்தலமஞ்சரி

## அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# விஷ்ணுஸ்தல மஞ்சரி.

காப்பு.

## நம்மாழ்வார்.

வேதமாஞ்செழுங்கனியினி ரதமெனத்தமிழ்மறையைவிளம்பினானை
ஏதமார்பெரும்பிறவித்துயர் நீங்கவிழித்தருளுமிருகண்ணானை
நாதனாரணனெனச்சொல்ஞான முத்திரையானைநளினபீடப்
பாததாமரையானையெம்மானைப் பராங்குசனைப்பரவிவாழ்வாம்.

## சக்ரவர்த்தித் திருமகன்.

விண்ணவர்முனிவர்மண்ணோர் துயர்கெடவில்லொன்றேந்தி
துண்ணெனுஞ்செய்கைத்தீயோர்த் தொலைத்துமைதிலியாண்டு
கண்ணெனும்வண்டுலாவுங்கமல நேரிணைகண்ணானைப்
பண்ணெனுமறைகளேத்தும் பரமனைப்பணிந்துய்வாமால்.

### ஸ்ரீபார்த்தசாரதி.

பார்த்தனூர்மையறீரப்பரமமாம்பொருள்பகர்ந்து
கூர்த்தவன்புடையாரேத்தக்கோலமேகொண்டுநின்று
சேர்த்தசெங்கமலையோடுதிருவல்லிக்கேணிமேவும்
பார்த்தசாரதியாந்தேவைப்பணிந்தியாமுய்ந்திட்டோமே.

### ஸ்ரீரங்கநாதன்.

ஆஸ்தாந்தேகுணராசிவத்குணபரீவாஹாத்மநாம்ஜந்மநாம்ஸங்க்யா
பௌமநிகேதநேஷ்வபிகுடீகுஞ்சேஷுரங்கேச்வர
அர்ச்ய:ஸர்வஸஹிஷ்ணு:அர்ச்சகபராதிநாகிலாத்மஸ்திதி:
ப்ரீணீஷேஹ்ருதயாளுபி:தவததஃசீலாஜ்ஜடீபூயதே.



### அர்ச்சை விஷயம்.

அநாதியான அசித்தினால் யாப்புண்ட இவ்வான்மாக்களது அநர்த்தங்களை நோக்கி அன்னார் ஊனக்கண்களாற் கண்டுய்யும் பொருட்டு சருவேச்வரன் காடுகளிலும் ஆற்றங்கரைகளினும் அன்பர் வீடுகளினும் அவ்வவர் இச்சையையெல்லாம் பெறுமாறு ஆச்ரிதருகந்த த்ரவியமே திருமேனியாகவும் அவர்களிட்ட பெயரே பெயராகவுங்கொண்டு தேசகால அதிகாரி நியமமின்றி அர்ச்சக பராதீனமான ஸ்நான அசன ஆசன சயனந்தொடக்கத் சமஸ்த வ்யாபாரங்களையும் உடையனாய், ஸ்வஸ்வாமி பாவம் மாறத் தன்னைத் தாழவிட்டு, திருவிளையாடல் கோலி, குணபூரணமான அர்ச்சாவதாரம் எடுத்தருளினான். அவ்வமலானந்தனது, அர்ச்சையின் மாட்சிமை அளவிறந்தது. அவனுகந்த புண்ணிய க்ஷேத்திரங்களை நாடிச்சென்று, தீர்த்தங்களிற் குளித்து, மூர்த்திகளை வணங்கி வழிபடுதலின் மேலாயதவமொன்று மிலது. அஃது வேதத்தின் துணிபு.

---

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விஷ்ணுஸ்தல மஞ்சரி.

---

ஆழ்வார்கள் மங்களாசாஸநம் செய்தருளின

## நூற்றெட்டுத் திருப்பதிகள்.

ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் றுமலைநா டோரிரண்டாம் - சீர்நடுநா
டாறோடீ ரெட்டுதொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்.

### சோழநாட்டுத் திருப்பதிகள்-௪௰. 4-1-5 1-9-5 19-1-5

7-1-66 ✓ 1-திருவரங்கம். (ஸ்ரீரங்கம்)

ப்ரபாவம்—ஸ்ரீரங்கநாதன் - நம்பெருமாள், ஸ்ரீரங்க நாச்சியார், ப்ரணவாக்ருதிதிவ்ய விமாநம், வேதச்ருங்கம், காவேரிநதி, சந்திர புஷ்கரணி, புன்னைவிருக்ஷம், புஜங்கசயநம், தெற்கேதிருமுகமண்டலம், சந்திரனுக்கும் தருமவர்மாவுக்கும் ரவிதர்மனுக்கும் ப்ரத்யக்ஷம். பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

பெரியநம்பி, பட்டர், வடக்குத்திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசாரியார் அவதார ஸ்தலம்.

மார்க்கமும்வசதிகளும்—இது திருச்சிறுப்பள்ளி கோட்டை ஸ்டேஷனுக்கு வடக்கே கற்சாலைமார்க்கமாய் 3-மைலிலும், ஜங்ஷன் ஸ்டேஷனுக்கு 6-மைலிலுமிருக்கிறது.

10-7-59, 26-6-60

ஸ்ரீரங்கத்திற்கு தென்கிழக்கில் ஒருமைலில் பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றாகிய ஜம்புகேசுவரமும் வடகிழக்கில் கொள்ளிடம் வடகரையில் 13-மைலில் (4). அன்பிலும், தென்கிழக்கில் காவேரியின்வடகரையில் 14-மைலில் (8) திருப்பேர்நகரும், வடக்கில் 3-மைலில் (5) கரம்பனூரும், வடமேற்கே 10-மைலில் (6) திருவெள்ளறையும், மேற்கில் காவேரிக்கு வடகரையில் 9-மைலில் குணசேகரமும், தெற்கில் 3-மைலில் (2) உறையூரும் இருக்கின்றன. கோட்டை ஸ்டேஷனுக்கு மேற்கே 1-மைலில் (2) உறையூரும், கிழக்கே ½-மைலில் தாயுமான ஸ்வாமிமலையும் இருக்கின்றன.

உத்ஸவங்கள்—தைமாதத்தில் புனர்வசு நக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு பத்துநாள் அயோத்தியில் ராமபிரானால் செய்யப்பட்டுவந்த பிரமோத்ஸவமும், மாசிமாதத்தில் ஏகாதசி இறுதியாகக்கொண்டு எட்டுநாள் தெப்போத்ஸவமும், பங்குனிமாதத்தில் உத்திரம் இறுதியாகக்கொண்டு பத்துநாள் சத்யலோகத்தில் பிரமதேவரால் செய்யப்பட்டுவந்த ஆதிபிரமோத்ஸவமுமாகிய பெரியஉத்சவமும்; சித்திரைமாதத்தில் ரேவதி இறுதியாகக்கொண்டு பத்துநாள் பிரமோத்ஸவமும் மார்கழிமாதத்தில் பகல் பத்து இராப்பத்து உத்ஸவமும், பகு விசேஷமாய் நடக்கின்றன. இந்த உத்ஸவத்திற்கு வருகின்றவர்களை கணக்கிடுவது கஷ்டம்.

இது ஒரு அழகிய முனிஸிபல் பட்டணம். வண்டிகளுண்டு. யாத்திரைவாசிகளுக்குச்சத்திரங்கள் கிடையா. வீடுகளில் குடிக்கூலிக்கு இடம்விடுகிறார்கள். வைஷ்ணவர்களுக்கு மட்டும் இரண்டு இராமானுஜகூடங்களிருக்கின்றன. ஹோட்டல்களும், காபிகிளப்புகளுமிருக்கின்றன. கோட்டை ஸ்டேஷனுக்கு ¾-மைலில் காவேரியாற்றுக்கு சமீபத்தில் யாத்

திரைவாசிகளுக்கு, 4-சத்திரங்களிருக்கின்றன. 2-பிராமணர்கள் ஹோட்டல்களும் 18-சைவர்கள் ஹோட்டகல்களுமிருக்கின்றன. சந்நிதியில் பற்றுக்கடை விசேஷம்.

குறிப்புகள்—ஸ்ரீரங்கம் காவேரியின் இரண்டு கிளைகளுக்கு மத்தியில் உள்ள ஒரு தீவு. ஆலயத்தின் ப்ராகாரங்கள், ஆலயத்தை மாத்திரமேயன்றி, பட்டணத்தின் பெரும் பாகத்தையும் சூழ்ந்திருக்கின்றன. இந்தியாவில் இதைவிட பெரிய ஆலயம் எங்குமில்லை. இந்தகோயில் ஏழுபெரிய பிராகாரங்களுடையதும் 15 கோபுரங்களுடையபதுமான ஏறக்குறைய $\frac{3}{4}$-மைல் (7744512-சதுர அடி) விஸ்தீரணமுள்ளது. கற்பகிரகத்தில் பெரிய பெருமாள் ஆதிசேஷன்மீது சயனத்திருக்கின்றனர். நம்பெருமாள், உபயநாச்சிமார் சகிதமாய் ஓராசனத்தில் அமர்ந்திருக்கின்றனர்.

அந்தளா பிரதக்ஷணத்தில் விநாயகர் வாசுதேவர் நரசிம்மர் துர்க்காதேவி வராகநாயனர் இவர்கள் வீற்றிருக்கின்றனர். முதல் பிராகாரம் 240-அடி நீளமும் 181-அடி அகலமும் உள்ளது. இதில் கருகல நாச்சியார், சந்தன மகாராஜன் மண்டபத்தில், துவாரபாலகாள், சின்னகருடாள்வார் சந்நிதி, சந்தன விமானமும் இருக்கின்றன. சுக்கிரவாரதீர்த்த மண்டபம் புளிகாப்பு மண்டபம் யாகசாலை, விரஜாதீர்த்தம், சேனை முதலியார் சந்நிதி, அர்ச்சுன மண்டபத்தில் சிதாதேவியார் பூமிநாச்சியார் சந்நிதிகளும் கிளி மண்டபம் நம்பிள்ளைமண்டபம், இந்த மூன்று மண்டபங்களை சேர்த்து பகல்பத்து மண்டபமென்பர். ஸ்ரீநிவாசன் சந்நிதி துஜஸ்தம்பம் இவைகள் இருக்கின்றன. இரண்டாவது பிராகாரம் 426-அடி நீளமும் 295-அடி அகலமுள்ளது. இதில் பவித்ரோற்சவ மண்டபம், துரைமண்டபம், பரம

பதவாசல் மடைபள்ளி ஊஞ்சல்மண்டபம் சிறிய திருவடி சந்நிதி, இவைகள் இருக்கின்றன.

மூன்றுவது பிராகாரம் 767-அடி நீளமும் 503-அடி அகலமுமுள்ளது இதில் கருடமண்டபம், கருடன் சந்நிதி (இந்த கருடன் 12-அடி உயரமுள்ளது இவ்வளவு பெரிய பிம்பமும், சந்நிதியும் எஙகுமில்லை.) நம்மாழ்வார் சந்நிதி, தான்ய லக்ஷ்மி செங்கமலவல்லி நாச்சியார் சந்நதிகளும் (நெல்லு குத்துகிற இடம்) மேலே பட்டாபிராமர், தீர்த்தவாசப் பெருமாள் முதலாழ்வார் சந்நிதிகள், சந்திர புஷ்கரணி தன்வந்தரி வசந்தகோபாலஸ்வாமி, வேதவியாசர், லக்ஷ்மி வராகப்பெருமாள், கோதண்டராமர், பரமபத நாதர், கீழே பட்டாபிராமர், வரதராஜப்பெருமாள், ரகுநாதப்பெருமாள், ஸ்ரீநிவாசன், திருமழிசையாழ்வார் சந்நிதிகளும், ஸ்ரீபண்டாரம் சூரியபுஷ்கரணி, திருக்கச்சிநம்பிசந்நிதி இவைகள் இருக்கின்றன. நான்காவது பிராகாரம் 1235-அடி நீளமும் 849-அடி அகலமும் உள்ளது. இதிலிருக்கும் கோபுரங்கள் மூன்றில் வெள்ளை கோபுரமானது 146-அடி உயரமுள்ளதாயும் 15 கோபுரங்களிலும் மிக்கழகமைந்தது, இதில் சக்கரத்தாழ்வார் சந்நிதி, வசந்த உத்சவமண்டபம் ஸ்ரீரங்க நாச்சியார்ஸந்நிதி மேட்டுஅழகர் பரவாசுதேவர் சந்நிதிகளும், மைசூர் மகாராஜா மண்டபம் தேசிகர் பெரிய வாச்சான்பிள்ளை ஸந்நிதி, 1000-கால் மண்டபம் 100-கால் மண்டபம், பிள்ளை லோகாசாரியர் சந்நிதி, பார்த்தசாரதி சந்நிதி, உடையவர் சந்நிதிகளும், ரங்கவிலாசத்தில் கீழ்வரிசையில் திருப்பாணாழ்வார், விட்டல் கிஷ்டன், தொண்டரடிப் பொடியாழ்வார் மதுரகவியாழ்வார் சந்நிதிகளும்,மேல் வரிசையில் நாதமுனிகள் ஆளவந்தார்,ஆண்டாள்,கண்ணன், அமிர்த கருடன் சன்னிதிகளும், ஸ்ரீ சூரணக்கடைகளும்

இருக்கின்றன. இதிலிருக்கிற 1000 கால் மண்டபமென்று சொல்லப்படும் மண்டபத்தில் 940 கால்களே இருக்கின்றன. இதன் குறைவான 60 கால்களையும் சேர்த்து இராப்பத்து உற்சவ கொட்டகை பந்தல்போடுகிறார்கள். ஐந்தாவது பிராகாரம் இதை உத்திரவீதியென்பர். 1653-அடி நீளமும் 1270-அடி அகலமும் உள்ளது. வடக்கு வீதியில் எம்பார் மடம், அரங்க நாராயணஜீயர் மடம், வேதபாடசாலை, பட்டர் திருமாளிகையும், கிழக்கு வீதியில் அகோபிலமடம் எதிராஜ மடம் வியாசராய ஸ்வாமிமடம் கோயிலண்ணன் திருமாளிகையும், தெற்கு வீதியில் மணவாளமாமுனி சந்நிதியும், திருத்தேரும், இருக்கின்றன, இதில் 220 வீடுகளும், 20 கடைகளும் இருக்கின்றன. ஆறுவது பிராகாரம் சித்திர வீதி யென்பர். 2108-அடி நீளமும் 1846-அடி அகலமும் உள்ளது. கிழக்கு வீதியில் வானமாமலைமடமும், கோரதமும், மேற்கு வீதியில் ப்ரம்மரதமும் இருக்கின்றன. எழாவது பிராகாரம் அடையவளைந்தான் வீதியெனப்படும். 3072 அடி நீளமும் 2521-அடி அகலமுமுள்ளது. மதில்சுவர் 20 அடி உயரமும் 6-அடி அகலமுமுள்ளது. மேற்கு வீதியில் ஆண்டாள் சந்நிதியும், தென்கிழக்கில் இரண்டு இராமானுஜ கூடமும் இருக்கின்றன. இதில் 1000-த்துக்கதிகமான வீடுகளும், அநேக கடைகளும் இருக்கின்றன. அருமையான கொத்துவேலை சித்திரவேலை முதலான விசேஷம் ஒன்றுமில்லையாயினும் இவ்வாலயத்தின் அலங்காரம் ஒரு தரம் பார்த்தவர்களுடைய மனதைவிட்டு அகல்வதில்லை. இந்த ஆலயத்தின் பொக்குஷம் மிகவும் பேர்போனது. நமது தட்டார்களுடைய இணையற்ற திறத்தையும், தீர்த்தவேலைப் பாடுள்ளதையும் காட்டும் மிகவும் நேர்த்தியான ஆபரணங்களை இங்கே பார்க்கலாம். இந்தியாவில் எல்லா பாகங்களிலு

மிருந்து ஜனங்கள் வருஷமுழுவதும் ஸ்வாமி தரிசனத்துக்கு வந்துகொண்டிருக்கிறார்கள். திருச்சினாப்பள்ளிமலை, உச்சி பிள்ளையார்கோயில், மார்க்கட்டு, நவாபு அரண்மனை, கல்லணை இவைகள் பார்க்கத்தக்கவைகள்.

### 2 - கோழி. (உறையூர்.)

ப்ரபாவம்—நிசுளாபுரி - அழகியமணவாளப் பெருமாள், வாஸலக்ஷ்மி, உறையூர் வல்லிநாச்சியார், கல்யாணவிமானம், கல்யாண தீர்த்தம், காவேரிநதி, குடமுருட்டிநதி. வடக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் ரவிதர்ம ராஜாவுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். திருப்பாணாழ்வார் அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது திருச்சினாப்பள்ளி கோட்டை ஸ்டேஷனுக்கு மேற்கே கற்சாலை மார்க்கமாய் 1-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திரமில்லை வீடுகளில் இடம்விடுவார்கள். ஹோட்டல் கிடையாது. காபி கிளப்புகள் மட்டும் இருக்கின்றன.

குறிப்பு—உறையூர் முன்பு சோழ அரசர்களுக்கு இராஜதானியாயிருந்தது. இங்குதிருமுக்கீச்சுரம் என்னும் சிவஸ்தலமுமிருக்கிறது. உறையூர் பெரியதிருமொழியிலும் பெருமாள் திருமொழியிலும் மற்ற சிலப்பதிகாரம் முதலான நூல்களிலும் கோழியென சொல்லப்பட்டிருக்கிறது. முன்பு ஒருகாலத்தில் இவ்வூரில் ஒருகோழி ஒருயானையைப் போரில் வென்றமையால் இதற்கு இப்பெயர் வந்ததாம்.

### 3-தஞ்சைமா மணிக்கோயில்.

(தஞ்சாவூர் வெண்ணாற்றங்கரை.)

ப்ரபாவம்—நீலமேகப்பெருமாள், செங்கமலவல்லி, சௌந்தர்ய விமானம், கன்னிகாபுஷ்பகரணி, அமுததீர்த்தம், கிழக்கே திரு

முகமண்டலம், வீற்றிருந்ததிருக்கோலம், பராசரமுனிவருக்கு ப்ரத்யக்ஷம். பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

தஞ்சையாளிநகர்:-நரசிங்கப்பெருமாள், தஞ்சைநாயகி வேதசுந்தரவிமாநம், சூரியபுஷ்கரணி, ராமதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், மார்க்கண்டேய மகாமுனிக்கு ப்ரத்யக்ஷம்.

மணிகுன்றபெருமாள் அம்புஜவல்லித்தாயார், மணிகூடவிமாநம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், மார்க்கண்டேயருக்கு ப்ரத்யக்ஷம். இங்கு தனித்தனியாக மூன்று சந்நிதிகள் இருக்கின்றன.

மார்க்கமும் வசதிகளும்:—இது தஞ்சாவூர் ஸ்டேஷனுக்கு வடக்கே திருவையாறு கற்சாலைமார்க்கத்தில் 2½-மைலில் வெண்ணாற்றின் கரைமேலிருக்கிறது. தஞ்சாவூருக்கும் இத்தலத்திற்கும் இரண்டுமைல் தூரமுண்டு. வண்டிகளுண்டு சத்திரங்களுண்டு. ஹோட்டலில்லை. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். தஞ்சாவூரில் 4 சத்திரங்களும் 30 ஹோட்டல்களும் இருக்கின்றன. ஸ்டேஷனுக்கு அருகாமையில் உயர்ந்த அழகான கோபுரத்தோடு கூடிய ப்ருஹதீஸ்வரஸ்வாமி கோயிலிருக்கிறது. இது பார்க்கத்தக்க விநோத காக்ஷிகளில் ஒன்று.

தஞ்சாவூரிலிருந்து வடகிழக்காக கும்பகோணத்திற்கு 29-மைல் தூரம் ரோட்டு மார்க்கமாய் வண்டியிலாவது கால்நடையிலாவதுசென்றால், பின்வரும் 9 திருப்பதிகளையும் சுலபமாய் சேவிக்கலாம்.

தாஞ்சாவூர் ஸ்டேஷக்கு வடக்கே 2½-மைலில் (3) தஞ்சைமாமணிக்கோயிலும், இதற்கு வடக்கே 3-மைலில் (15) கண்டியூரும் (இங்குபெரிய சிவஸ்தலமிருக்கிறது)

இதற்குவடக்கே 1-மைலில் பிரபல சிவஸ்தலமாகிய திருவையாறும் இதற்குக் கிழக்கே $7\frac{1}{2}$-மைலில் (25) கூடலூரும் இதற்குக்கிழக்கே $4\frac{1}{2}$-மைலில் (28) கவித்தலமும், இதற்குத் தெற்கில் 1-மைலில் பாபநாசமும் இதற்கு வடகிழக்கே $3\frac{1}{2}$-மைலில் மண்டங்குடியும் (தொண்டரடிப்பொடிஆழ்வார் அவதரித்த தலம்) இதற்குக் கிழக்கே $\frac{1}{2}$.மைலில் (7) புள்ளம் பூதங்குடியும், இதற்கு வடகிழக்கே I-மைலில் (9) ஆதனூரும் இதற்கு தெற்கே 1-மைலில் சுப்பிரமண்ய ஸ்தலமாகிய ஸ்வாமிமலேயும், இதற்குக்கிழக்கே 4-மைலில் (14) திருக்குடந்தையும் இருக்கின்றன.

16-3-56 4 - அன்பில். 11-1-66

ப்ரபாவம்—திருவடிவழகியநம்பி, அழகியவல்லி நாச்சியார் தாரகவிமாநம், மண்டுகபுஷ்பகரணி, கிழக்கேதிருமுகமண்டலம், புஜங்கசயநம், ப்ரம்மாவுக்கும், வால்மீகருக்கும் ப்ரத்யக்ஷம். திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—தஞ்சாவூருக்கு மேற்கே 11-மைல் தூரமுள்ள பூதலூர் ஸ்டேஷனிலிறங்கி வடக்கே 5-மைல் தூரம் சென்று ஸிவஸ்தலமாகிய திருக்காட்டுபள்ளியைச்சேர்ந்து அங்கிருந்து மேற்கே காவேரி வடகரை மட்சாலேயே 5-மைல் தூரஞ்சென்று கோவிலடி (8) (திருப்பேர் நகரை, அடைந்து வடக்கே திரும்பி இரண்டுமைல் தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். இத்தலம் கொள்ளிடம் வடகரையிலுள்ளதால் ஆற்றையும் மழைகாலங்களில் இரண்டு சிறுகால்வாய்களேயும் பரிசலாற்கடக்கவேண்டும். அனேகமாய் ஜலமிராது அப்படியிருந்தாலும் இரண்டடி ஜலமிருக்கும், இந்த இரண்டு மைலுக்கும் பாதையில்லாமையால் பண்டிகள் கிடையா. சத்திரமில்லே ஹோட்டலில்லே சந்நிதியில் சொல்லிவைத்தால் ப்ரசாதம் கிடைக்கும்.

இச்சந்நிதிக்கு எதிரில் அன்பில் ஆலந்துறை என்னும் சிவஸ்தலமுமிருக்கின்றது. இத்தலத்திற்கு மேற்கே 10-மைலில் (5) கரம்பனூரும், தென்மேற்கே 13-மைலில் (1) ஸ்ரீரங்கமும், தெற்கே 2-மைலில் (8) திருப்பேர்நகரும் இருக்கின்றன.

### 5 கரம்பனூர் (உத்தமர்கோயில்.)

16-3-56
11-1-66

ப்ரபாவம்—புருஷோத்தமன். பூர்வாதேவி, உத்யோக விமாநம், கதம்பதீர்த்தம், வாழையரம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநயம், கதம்பமகரிஷிக்கும், உபரிசரவஸுவுக்கும், ஸநகஸநந்தந ஸநத்குமாரர்களுக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

இந்தச்சந்நிதியில் சிவாலயமும் பிரமாலயமும் புராதனங்களான வாழைமரங்களும் இருக்கின்றன.

**மார்க்கமும் வசதிகளும்**—இது ஸ்ரீரங்கத்திற்கு வடக்கே திருவெள்ளறைக்குப்போகும் கற்சாலை மார்க்கத்தில் 3-மைலிலிருக்கிறது. கால்நடையாய் கொள்ளிடத்தைக் கடந்து சென்றால் $1\frac{1}{2}$-மைலிருக்கும். பண்டிகளுண்டு. சத்திரமில்லை. ஹோட்டலில்லை. சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும்.

இதற்குக் கிழக்கே 10-மைலில் (4) அன்பிலும், வடமேற்கே 7-மைலில் (6) திருவெள்ளறையும் இருக்கின்றன.

### 6 - திருவெள்ளறை.

16-3-56
10-1-66

ப்ரபாவம்—புண்டரீகாக்ஷன், பங்கயச்செல்வி நாச்சியார், செண்பகவல்லி நாச்சியார், ஸ்வேதகிரி, விமலாக்ருதிவிமாநம், குசதீர்த்தம், மணிகர்ணிகாதீர்த்தம், சக்ரதீர்த்தம். திவ்யபுஷ்கரணி, புஷ்கல தீர்த்தம், பத்மதீர்த்தம், கந்தபுஷ்கரணி, க்ஷீரபுஷ்கரணி, வராஹதீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம். பெரிய

திருவடிக்கும் சிபிசக்ரவர்த்திக்கும் பூதேவிக்கும் மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

உய்யக்கொண்டார் அவதார ஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்-இது ஸ்ரீரங்கத்திற்கு வடக்கே மண்ணச்ச நல்லூர் கற்சாலை மார்க்கமாய் 10-மைலில் உள்ளது. உத்தமர்கோயிலிலிருந்து 7-மைலிலிருக்கிறது. வண்டிகள் அகப்படும். சத்திரமில்லை வசதிகள் உண்டு. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

1-2-57 3-1-66

## 7 - புள்ளம் பூதங்குடி. ✓

ப்ரபாவம்—வல்விலிராமன், பொற்றாமரையாள், சோபநவிமாநம், க்ருத்ரதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், சக்ரவர்த்தித்திருமகனுக்கும், க்ருத்ர ராஜனுக்கும் ப்ரத்யக்ஷமாய் மோக்ஷங் கொடுத்தவிடம் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—சுந்தரபெருமாள் கோவில் ஸ்டேஷனுக்கு வடக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலிலுள்ள கண்ணஞ்சேரியை அடைந்து ½-மைல்தூரம் கிழக்கே சென்றால் இத்தலத்தையடையலாம். இரண்டு ஆறுகளைக் கடக்கவேண்டும்.

இதுஒருசிறிய ஆலயம் ப்ரபலமில்லை. இத்தலத்திற்குத்தென்கிழக்கே 2-மைலில் சுவாமிமலையும், கிழக்கே 6-மைலில் (14) திருக்குடந்தையும் மேற்கே 1-மைலில் மண்டங்குடியும் வடகிழக்கே ½-மைலில் (9) ஆதனூரும் இருக்கின்றன.

வண்டிகள் அகப்படா. சத்திரமில்லை சந்நிதியிலும் பிரசாதம் கிடைக்காது.

## 8 - திருப்பேர்நகர். (கோவிலடி)

ப்ரபாவம்—அப்பக்குடத்தான், கமலவல்லித்தாயார், இந்திரகிரி, இந்திரவிமானம், இந்திரதீர்த்தம், காவேரிநதி, மேற்கே திருமுக மண்டலம், புஜங்கசயநம், வலது அஸ்தத்தின் கீழேகுடம், உபமனுவுக்கும் பராசருக்கும் ப்ரத்யக்ஷம் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—தஞ்சாவூருக்கு மேற்கே 11-மைல் தூரத்திலுள்ள பூதலூர் ஸ்டேஷனிலிறங்கி வடக்கே கற்சாலை மார்க்கமாய் 5-மைலிலிருக்கும் திருக்காட்டுப்பள்ளியை அடைந்து அங்கிருந்து மேற்கே காவேரியின் வடகரையே மட்சாலை மார்க்கமாய் 5-மைல் தூரம் சென்றால் இத்தலம் வரலாம். பங்குனிமாதத்தில் உத்திரம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம்.

வண்டிகளுண்டு சத்திரமுண்டு ஹோட்டலில்லை சந்நிதியில் தேசாந்திரிகளுக்கு பிரசாதம் கிடைக்கும். இத்தலத்திற்கு மேற்கே 5 மைலில் காவேரியின் (மத்திய) அணைக்கரை (Grand Anicut) பார்க்கத்தகுந்தது.

| | |
|---|---|
| Anaikkarai called Grand Anicut of 30 arches (worthseeing.) | Upper Anicut 20 miles West<br>Trichinopoly 10 miles West<br>Tiruvarambur 6 miles South<br>Tirrukkattuppalli 10 miles east<br>Tiruvaiyar 20 miles east |

இங்கிருந்து மேற்கே 14-மைலிலும் கல்லணையிலிருந்து 9-மைலிலும் (1) ஸ்ரீரங்கமிருக்கிறது. வடக்கே 2-மைலில் (4) அன்பில் இருக்கிறது.

பூதலூர் ஸ்டேஷனுக்கு அடுத்த சோளகம்பட்டி ஸ்டேஷனிலிறங்கி வடக்கே 3-மைலிலுள்ள கச்சமங்கலம்

சென்று அங்கிருந்து வரப்புமார்க்கமாய் 1-மைல்சென்று வெண்ணாற்றையும் காவேரியையும் கடந்தால் இத்தலத்தை யடையலாம். வண்டிகள் கிடையா. ஆறுகளுக்குப் பரிசல் கள் உண்டு. நாட்டுஜெனங்கள் தவிர மற்றையோர்கள் இம் மார்க்கம் போவதில்லை.

1-2-57 9 - ஆ த னூ ர். ✓
3-1-66

ப்ரபாவம்—ஆண்டளக்குமையன், ஸ்ரீரங்கநாயகியார், ப்ரணவ விமாநம், சூரியபுஷ்பகரணி, கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசய நம், காமதேநுவுக்கும், திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். திரு மங்கை யாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-கும்பகோணத்திற்கு மேற்கே 4-மைலிலிருக்கும் சுவாமிமலையை அடைந்து அங்கு நின்றும் வடக்கே திரும்பி வரப்புமார்க்கமாய் 1-மைல்தூரம் சென் றால் இத்தலத்தையடையலாம். கும்பகோணத்திற்கு மேற்கே 2-மைலிலுள்ள தாராசுரம் ஸ்டேஷனிலிறங்கி மேற்கேகற் சாலை மார்க்கத்திலுள்ள திருவலஞ்சுழியை (சிவஸ்தலம்) அடைந்து வடக்கே திரும்பி 1-மைலிலுள்ள( ஆறுகளுக்கு பரிசல்) சுவாமிமலையினின்றும் வடக்கே வரப்புமார்க்கமாய் 1-மைல்தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். வெகு சிறிய சந்நிதி, கிராமமும் சிறியது, ஒன்றுமகப்படாது.

10-1-57 10 - திரு வழுந்தூர் (தேரழுந்தூர்.)
27-4-58, 21-9-59,

ப்ரபாவம்—ஆமருவியப்பன், செங்கமலவல்லித்தாயார், கருட விமாநம், தர்சநபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக் கோலம், உபரிசரவஸு ராஜாவுக்கும், காவேரிக்கும், தர்மதேவ தைக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

இது வடகலை சந்நிதி-ரங்கநாதன் சந்நிதியும் கோவிந்த ராஜன் சந்நிதியும் தனியாகச் சந்நிதிவீதியிலிருக்கிறது- இவை தெங்கலையார் ஸ்வாதீனத்திலிருக்கிறது.

மார்க்கமும் வசதிகளும்—இது மாயவரத்திற்கு மேற்கே 5½-மைல் தூரத்திலிருக்கும் குற்றாலம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே 3½-மைலிலும் மாயவரத்திலிருந்து தென் மேற்கே மட்சாலை மார்க்கமாய் 7-மைலிலுமிருக்கிறது. இச்சந்நிதிக்குகீழ்திசையில் பிரபல சிவஸ்தலமிருக்கிறது.

வண்டிகளுண்டு சத்திரங்களும் ஹோட்டல்களும் கிடையா. சந்நிதியில் சர்வத்திரர்களுக்கும் பிரசாதம் கிடைக்கும். குற்றாலத்தில் 2-சத்திரங்களுக்கும் 3-ஹோட்டல்களும் இருக்கின்றன.

பிரமோத்சவம் வைகாசி ஹஸ்தத்தில் தீர்த்தம்.

## 11 - சிறுபுலியூர்.

ப்ரபாவம்—அருமாகடல், திருமாமகள் நாச்சியார், நந்தவர்த்தக விமாநம், அநந்த ஸரஸ்ஸு, மாநஸபுஷ்கரணி, தெற்கே திருமுக மண்டலம், புஜங்கசயநம். வ்யாசமாமுனிக்கும், வியாக்கிரமருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இதுமாயவரம் திருவாலூர் பாதையிலுள்ள மங்கநல்லூர் ஸ்டேஷனுக்குத் தென்கிழக்காகவும் பேரளம் ஸ்டேஷனுக்கு வடகிழக்காகவும் மட்சாலை மார்க்கமாய் 3-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு சத்திரமில்லை சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

## 12 - திருச்சேறை.

ப்ரபாவம் - ஸாரக்ஷேத்திரம், ஸாரநாதன், ஸாரநாயகி, ஸார விமாநம், ஸாரபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், காவேரிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்காய் குடவாசலுக்குச்செல்லும் கற்

சாலை மார்க்கத்தில் 6·மைலில் இருக்கும் நாச்சியார்கோவிலை அடைந்து பின்னும் தெற்கே 3-மைல்தூரம்சென்றால் இத்தலத்தை அடையலாம். வண்டிகளுண்டு. சத்திரமிருக்கிறது, ஹோட்டலில்லை சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

31-1-57 19-10-65 13 - தலைச்சங்க நாண்மதியம். (தலைச்சங்காடு)

பரிபாவம்—நாண்மதியப்பெருமாள், வெண்சுடர்ப் பெருமாள் தலைச்சங்க நாச்சியார், செங்கமலவல்லி, சந்திரவிமானம், சந்திரபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், தேவர்களுக்கும் சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம், பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது சீகாழி ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கே தரங்கம்பாடிக்குபோகும் கற்சாலை மார்க்கத்தில் 10-மைலிலிருக்கிறது. மாயவரம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே தரங்கம்பாடிக்குபோகும் கற்சாலைமார்க்கத்தில் 7-மைலிலிருக்கும் செம்பொனார்கோவிலை (சிவஸ்தலம்) அடைந்து அங்கிருந்து வடக்காகத்திரும்பி 5-மைல் தூரம் மட்சாலைமார்க்கமாய்ச்சென்றாலும் இத்தலத்தை யடையலாம். காவேரியாற்றின் தென்கரையிலிருக்கிறது. நாங்கூரிலிருந்து தெற்கே 4-மைலிலிருக்கிறது. நாங்கூரிலிருந்து மணிகர்ணிகை யாற்றைக்கடந்து வயல்மார்க்கமாய்த்தெற்கே வந்தால் இத்தலத்தையடையலாம். சீகாழியிலிருந்தும் மாயவரத்திலிருந்தும் . வண்டிகள் அகப்படும். சத்தமநிகம். சத்திரமில்லை ஹோட்டலில்லை. சந்நிதியில் பிரசாதம் பெருமாளுக்கே கஷ்டம். சந்நிதி பாழடைந்துகிடக்கிறதும் இச். சந்நிதிக்கு கிழக்கில் சிவக்ஷேத்திரமிருக்கிறது.

31-12-56 10-6-57 14 - திருக்குடந்தை, (கும்பகோணம்)

பரிபாவம்—சாரங்கபாணிப்பெருமாள், ஆராவமுது, கோமளவல்லி, வைதீகவிமானம், காவிரிநதி ஹேமபுஷ்கரணி, கிழக்கே திரு

14-9-59, 26-6-65

முகமண்டலம், உத்யோகசயநம், ஹேமமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

திருமழிசையாழ்வார் திருநாட்டுக்கெழுந்தருளியதலம். ஆழ்வார் சந்நிதி ப்ரதக்ஷிணமாக சாரங்கபாணி சந்நிதிக்கு மேற்கே தென்கலையார் ஸ்வாதீனத்திலிருக்கிறது. திருக்குடந்தைக் கோயிலுள்ள ஸ்தம்பமெல்லாம் 12 வடகலை திருமண்களை சாத்திக்கொண்டிருக்கின்றன.

உத்ஸவம்—தைமாதம் முதற்தேதி முதற்கொண்டு 10-நாள் சங்கராந்தி பிரமோத்ஸவமும் சித்திரைமாதத்திலே ஒரு பிரமோத்ஸவமும் நடக்கின்றன.

**மார்க்கமும் வசதிகளும்**—இது கும்பகோணம் ஸ்டேஷனுக்கு மேற்கே 1-மைலில் இருக்கிறது. இது ஒருபெரிய பட்டணமாகையால் வண்டிகளுண்டு 13-சத்திரங்களும் 30 ஹோட்டல்களும் 40-கிளப்புகளும் இருக்கின்றன. இத்தலத்திற்கு மேற்கே 4-மைலில் ஸ்வாமிமலையும் (9) ஆதனூரும் (7) புள்ளம் பூதங்குடியும், தெற்கே 2-மைலில் (21) நந்திபுர விண்ணகரமும், கிழக்கே 4-மைலில் (16) திருவிண்ணகரும் தெற்கே 4-மைலில் (20) திருநறையூரும் இருக்கின்றன.

கும்பகோணம் முன்பு சோழராஜதானிக்கு ஒரு ப்ரதானபட்டணமாயிருந்தது. கல்வியிலும் பெயர்பெற்றதாயிருந்தது. இதை ஆங்கிலேயர் Oxford of Southern India. என்பர். இதில் அனேக சிவாலயங்களும் விஷ்ணுவாலயங்களும் நிரம்பிக்கிடக்கின்றன. சிவஸ்தலங்கள் 12-ல் குடமூக்கு (கும்பேசுரர்கோயில்) குடந்தைக் கீழ்கோட்டம் (நாகேசுரர்கோயில்) குடந்தைக்காரோணம் (காசிவிசுவநாதர் கோயில்) கொட்டையூர், (கோடீஸ்வரர்) சிறந்தவைகள்.

விஷ்ணுஸ்தலங்களில் சாரங்கபாணி ஸ்வாமி சந்நிதி, சக்கா பாணி ஸ்வாமி சந்நிதி. இராமஸ்வாமி சந்நிதி, வராகநாயனர் சந்நிதி முக்கியமானவைகள். ஓர் பிரமாலயமும் சூரியாலய மும் இருக்கின்றது. சாரங்கபாணிச் சந்நிதியின் கோபுரம் 147-அடி உயரமுள்ளது. கும்பேச்சுரர்கோயில் கோபுரம் 128-அடி உயரமுள்ளது இதின் கோபுரவாயிலிலிருந்து உள் ளுறக்கட்டப்பட்டிருக்கும் மண்டபம் 83-அடி நீளமும் 55-அடி அகலமுமுடையது. இதில் பக்ஷணக்கடைகளும் பச்சை பதா ர்த்தக்கடைகளும் மளிகைக்கடைகளும் பாத்திர சாமான் கடைகளும் மற்றைக்கடைகளும் வரிசையாய் அமைக்கப் பட்டிருப்பதைப்பார்த்தால் கண்களுக்கு விழாவாயிருக்கும். பித்தளை செம்பு ஈயப்பாத்திரங்களுக்கு பேர்பெற்ற இட மென்று இதை குறிப்பிடலாம். தென்னாட்டில் மிகச்சிறந் ததும் 20 ஏகரா விஸ்தீரணமுள்ளதும் நான்கு பக்கங்களி லும் கற்படிகட்டுகளை அமைக்கப்பட்டதும் அநேக சிறிய கோயில்களால் சூழப்பெற்றதுமான மஹாமகக்குளம் ஸ்நாந விசேஷம். 12-வருஷத்திற்கு ஒருமுறைவரும் மஹாமகம் விழா லோகப்ரஸித்தம், இதற்கு சுமார் ஆறுலக்ஷம் ஜனங் கள் வந்து கூடுகிறார்கள். இப்பட்டணத்திற்கு காவேரி நதி வடவெல்லையாயும் அரசிலாறு தென் எல்லையாயும் கிழக்கு மேற்காக மூன்று மைலும் வடக்கு தெற்காக $1\frac{1}{2}$-மைலு முள்ள 65000 ஜனங்களுடைய செழிப்பான பட்டணம். இங்குள்ள சங்கராசாரியார்மடம் மிகச்சிறந்தது.

## 15 - கண்டியூர். 18-12-56

ப்ரபாவம்—அரன்சாபந்தீர்த்த பெருமாள், கமலவல்லி நாச்சி யார், கமலாக்ருதி விமாநம், கபால தீர்த்தம், கிழக்கே திருமுகமண்ட லம், நின்ற திருக்கோலம், ருத்திரனுக்குக்கபால நிவர்த்திசெய்தவர், அகஸ்த்யருக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

2-1-66

**மார்க்கமும் வசதிகளும்**-தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப்போகும் கற்சாலை மார்க்கத்தில் 2½-மைலிலிருக்கும் தஞ்சைமாமணிக் கோயிலையடைந்து வடக்கே 3½-மைல்தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். கும்பகோணத்திற்கு தென் கிழக்கே 19-மைலிலுள்ள திட்டை ஸ்டேஷனிலிறங்கி 3½-மைலில் தஞ்சாவூர் ரோட்டு கலக்குமிடமாகிய பள்ளி அக்கிரகாரத்தை அடைந்து வடக்கே திரும்பி திருவையாறு கற்சாலைமார்க்கமாய் 3½ மைல் சென்றாலும் இத்தலத்தை யடையலாம். சத்திரமுண்டு ஹோட்டலில்லை. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

இத்திருக்கண்டியூர் சிவஸ்தலங்களுள் அஷ்டவீரட்டங்களில் ஒன்றாகியும் ஸப்த ஸ்தாந க்ஷேத்திரங்களுள் ஐந்தாவதாயுமிருக்கின்றது.

## ✓ 16 - திரு விண்ணகர். (உப்பிலியப்பன் சந்நிதி) 1-1-5 8-1-5 17-10 7-10

ப்ரபாவம்—உப்பிலியப்பன், பூமிதேவிநாச்சியார், விஷ்ணு விமாநம், ஆர்த்திபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், மார்க்கண்டேயருக்கும், பெரியதிருவடிக்கும், காவேரிக்கும், தர்மதேவதைக்கும் பிரத்யக்ஷம். பேயாழ்வார் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாஸாஸநம்.

**மார்க்கமும் வசதிகளும்**—இது கும்பகோணம் ஸ்டேஷனுக்கு கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலிலிருக்கிறது. சத்திரமுண்டு ஹோட்டலில்லை சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். தஞ்சாவூர் ஜில்லாவுக்கு இது திருவேங்கடம் என்னும் திருப்பதிபோல் விளங்குகின்றது.

இத்தலத்திற்கு ப்ராத்தனைகளைச் செலுத்த நூற்றுக் கணக்கான ஜனங்கள் சதா வந்துக்கொண்டிருக்கிறார்கள். சில

வருஷங்களுக்குமுன் ஒரு தனவான் தம் பந்துக்களுடன் இத்தலத்திற்கு யாத்திரைவந்தார். அவர்கள் சந்நிதிக்குள் கருட ஸ்தம்பத்திற்கு ஸமீபம் சென்றதும் ஒரு பெரிய நாகம் திடீரெனவந்து வழியை மறைத்து தன் விரிவான படத்தை விரித்து சீறிக்கொண்டிருந்தது. அச்சமயம் சந்நிதி அர்ச்சகர் அவ்விடம்வந்து உங்களில் யாராவது ஒருவர் உப்புகொண்டுவந்திருக்கலாம். அதனால்தான் பாம்பு உங்களை கோயிலுக்குள் போகவிடவில்லை என்றார். உப்பைக் கொண்டுவந்திருந்த ஒருவர் அதை எறிந்துவிட நாகமும் மறைந்துவிட்டது.

பூர்வத்தில் இத்தலத்தில் மார்க்கண்டேயர் தவஞ் செய்துகொண்டிருந்தார். அவருடன் 6-வயதுப் பெண் குழந்தை இருந்தது. ஒருநாள் மார்க்கண்டேயர் வெளியே போய்விட்டார். பெண் குழந்தை தனியாக இருந்தது. அத்தருணம் அக்கோவிலிலிருக்கும் விஷ்ணுமனிதரூபமாகவந்து அப்பெண்ணை விவாகஞ் செய்துகொண்டார், ரிஷி திரும்பி வந்தவுடனே பெண்ணை விவாகஞ்செய்துகொண்ட மனிதன் மீது கோபங்கொண்டு சபிக்கப்போனார். உடனே அந்த மனிதன் தன் நிஜரூபத்தைக்காட்டினான். அதைக்கண்டு சந்தோஷித்து, ஸ்வாமி இந்தப்பெண்ணுக்குச் சமையல் செய்ய உப்புபோடக்கூடத்தெரியாதே. அவ்வளவு சிறிய வயதாயிற்றே என்று ரிஷி விஷ்ணுவை நோக்கிச்சொல்ல, 'பரவாயில்லை, நான் உப்பில்லாமலே சாப்பிடுகிறேன் அவள் என் மனைவியாக இருக்கட்டும். இன்றுமுதல் இத்தேவாலயத்தில் உப்பு வாசனையே வரக்கூடாது. தெரியாமல் யாராவது உப்பைக்கொண்டுவந்தால் நாகம் வந்து அந்த உப்பை வெளியே கொண்டுபோய் எறிகிற வரையிலும் வழிமறித்துக்கொள்ளும்' என்றதாகச்சொன்னார் அர்ச்சகர்.

## 17 - திருக்கண்ணபுரம்.

ப்ரபாவம்—சௌரிராஜப்பெருமாள், கண்ணபுரநாயகி, உத்பலாவர்த்தக விமாநம், நித்யபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், கண்வமாமுனிக்கு ப்ரத்யக்ஷம், நம்மாழ்வார் குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாஸாசநம்.

உத்ஸவம்-மாசிமாதத்தில் மகம் இறுதியாகக்கொண்டு 10-நாளும் வைகாசியில் திருவோணம் இறுதியாகக்கொண்டு 10-நாளும் ஆக இரண்டு பிரமோத்ஸவங்கள் நடைபெறுகின்றன. இராபத்து பகல் பத்து உத்சவம் இச்சந்நிதியில் விசேஷம்.

மார்க்கமும் வசதிகளும்-நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே $3\frac{3}{4}$-மைலிலிருக்கும் திருப்புகலூரையடைந்து தெற்கே திரும்பி ஆற்றைக்கடந்து (கட்டுப்பாலம் உண்டு) ஒரு மைல்தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். சத்திரமுண்டு ஹோட்டலில்லை சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

குறிப்பு:—காழிச்சீராம விண்ணகரம், சித்திரகூடம், திருவாரூர் திருவண்ணாமலை, முதலிய அநேக விஷ்ணுவாலயங்களையெல்லாம் இடித்து இலிங்கப்பிரதிஷ்டை செய்துக்கொண்டுவந்த கிருமிகண்ட சோழனானவன், திருக்கண்ணபுரம் சென்று, அவ்வாலயத்தின் ஏழுதிருமதில்களில் ஆறு மதில்களை இடித்துக்கொண்டுபோய் திருமருகல் திருப்புகலூர் முதலிய சிவாலயங்களைக் கட்டுவித்துப் பின்னர் உள்ள மதிளினையும் இடிக்கப்புகுவதரிந்த திருக்கண்ணபுரம் அரையர் என்னும், அக்காலத்துள்ள மஹான் ஒருவர் மனம் நொந்தவராய்ஸ்ரீசௌரிராஜப்பெருமாள் திருமுன்பே திராவிட வேத சேவாகால சமயத்தில் இதனை நினைத்து, மனம் பொராதவ

ராய் எ. பாமதயாநிதே! மகாபாபிஷ்டனுய் பகவத்வேஷி யான இவ்வரசன் நினது திருக்கோயிலின் ஆறுமதில்களை முன்னர் இடித்துக்கொண்டுபோனதுமன்றி நின்ற ஒரு மதிலையும் இதோ இடிக்கப்போகின்ருனே, உனக்கென்ன சன் தெரிவில்லையோ? வென்று, குபிதராகி தனதுகரத்தி லேயிருந்த தாளத்தினுல் ஸ்ரீ சௌரிராஜரின் திருமுகத்தில் ஓங்கி அடித்திட அவ்வடிப்பட்ட மாத்திரத்தில் கருணாநிதி யின் அஸ்தத் தொளிரும் நேமியானது உடனே சென்று அச்சண்டாளனின் கண்டத்தைக் கண்டங்கண்டு கடல் மூழ்கி நஞ்சர்வஸ்வாமியின் திருக்கரத்தேவந்து நின்றது. இவ்வுண்மைக் கறிகுறியாய் இன்றளவும் திருக்கண்ணபுரத் தில் ஆறுமதில்களின் அஸ்திபாரங்களும், ஸ்ரீ சௌரிராஜப் பெருமாளின் திருமுகத்தில் தாளத்தால் அடிப்பட்ட தழும் பும், இத்திவ்யதேசத்தெம்பெருமான் திருக்கரத்தேமட்டும் ப்ரயோகச் சக்கரமுமிருப்பதை நன்கு காணலாம்.

25-12-56 18 - திருவாலி திருநகரி. 14-10-65
20-8-58

ப்ரபாவம்—வயலாலிமணவாளன், அம்ருதகடவல்லி நாச்சியார் அஷ்டாக்ஷர விமானம், இலாக்ஷணி புஷ்கரணி, அலாதநிபுஷ்கரணி மேற்கே திருமுகமண்டலம், வீற்றிருந்ததிருக்கோலம், அலாதநிகஞ்சம ப்ரஜாபதிக்கும், திருமங்கை யாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங் கையாழ்வார் மங்களாசாஸநம். திலசேகரர்பாடல் |

மார்க்கமும் வசதிகளும்—இது சீகாழி ஸ்டேஷனி லிருந்து மட்சாலை மார்க்கமாய் தென்கிழக்கே 6-மைலிலிருக் கிறது. வண்டிகளுண்டு, சத்திரமில்லை, ஹோட்டலில்லை. இராமாநுஜ கூடமிருக்கிறது. சந்நிதியில் பிரசாதங்கிடைக் கும். திருவாலிதிருநகரி என்பது திருவாலி என்றும் திருநகரி என்றும் இரண்டு திருப்பதிகள் இருக்கின்றன. திரு வாலிக்கும் திருநகரிக்கும் 2-மைல் தூரமிருக்கிறது. திரு

நகரியில் மணவாளன் சந்நிதியும் திருமங்கையாழ்வார் சந்நிதியும் இருக்கின்றன. திருவாலியில் நரசிம்மஸ்வாமி சந்நிதியிருக்கிறது. திருநகரிக்கு 2-மைலில் தென்மேற்கில் திருவாலியும் இங்கிருந்து தெற்கே 2-மைலில் (30) திருநாங்கூரும் இருக்கின்றன. இதற்கு தெற்கே 2-மைலில் (13) தலைச்சங்க நாண்மதியம் இருக்கின்றது.

பெருமாளுக்கு பங்குனியில் உத்திரம் இறுதியாகக் கொண்டு 10-நாள் பிரமோத்சவமும் ஆழ்வாருக்கு கார்த்திகையில் கிர்த்திகை இறுதியாகக்கொண்டு 10-நாள் சாத்துமுறை உத்சவமும் அதிவிபவமாய் நடைபெறுகின்றன. பங்குனி உத்சவத்தில் எட்டாங்நாளன்று பெருமாளும் நாச்சிமாருமாக திருக்கல்யாண மஹோத்சவங்கண்டருளி அவ்வலங்காரத்துடன் அபரிமிதமான தீவட்டி மத்தாப்பு பாணவேடிக்கை முதலிய ஆர்ப்பாடத்துடன் இரவு 11-மணிக்கு திருநகரிக்கு எழுந்தருளா நிற்க அதற்கு, முன்னமே நம் திருமங்கையாழ்வார் ஆடல்மா ஆரூடராய் மந்திரிகள் சகிதம் சென்று திருவரசினடியில் பதிவிருந்து வருகிற மணமக்களின் திருவாபரணங்களைப்பறித்தருள இவ்விடம் சிலவார்த்தைப்பாடுகள் ஆனதும் பின்னர் பகவான் கருடாரூடராய் இலக்ஷ்மி சமேதராய் சேவை சாதித்தருள்பெறும் வேடுபறி உத்ஸவத்தைப்பார்க்கப் பதினுபிரங்கண்கள் வேண்டும்.

## 19 - திரு நாகை. (நாகப்பட்டணம்) 1-9-56 1-8-60 ..-3-65

ப்ரபாவம்—சௌந்தர்ய ராஜப்பெருமாள், சௌந்தர்ய வல்லித் தாயார், சௌந்தர்ய விமாநம், ஸாரபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், நாகராஜனுக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது நாகப்பட்டணம் ஸ்டேஷனுக்கு வடமேற்கே 1-மைலிலிருக்கிறது. 2-சத்திரங்களும்

4 ஹோட்டல்களும் இருக்கின்றன. இங்கு இரண்டு பெரிய சிவஸ்தலங்களிருக்கின்றன. இங்கிருந்து மேற்கே கற்சாலை மார்க்கமாய் 5-மைலிலிருக்கும் ஆழியூர் வந்து தெற்கே திரும்பி ஒரு மைல் தூரம் சென்றால் (26) திருக்கண்ணங்குடியை யடையலாம்.

குறிப்பு:—பங்குனி உத்திரம் இறுதியாகக்கொண்டு 10 நாள் பிரமோத்சவம். இத்தலத்துக்கு வடக்கே 4-மைலில் பிரபல மகமத்திய க்ஷேத்திரமாகிய நாகூர் இருக்கின்றது இதற்கு ·இந்தியர்களே அனேகமாக யாத்திரை செய்கிறார்கள்.

-1-56 ✓ 20 - திரு நறையூர். (நாச்சியார் கோயில்)
5-3-57
5-6-65 [?]ரபாவம்—நம்பி, நம்பிக்கைநாச்சியார், ஸ்ரீநிவாசவிமானம், மணிமுக்தாநதி, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், மேதவமுனியின் கன்னிகையைப் பலிமி பிடித்துக்கொண்டுபோக அவனைச் சயித்து மேதவமுனிக்கு அருள்செய்தவர். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். திருமங்கையாழ்வார் சமாஸ்ரயணம் செய்துகொண்ட தலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்காய்க் குடவாசலுக்குச் செல்லும் கற்சாலைமார்க்கத்தில் 6-மைலிலிருக்கிறது. இத்தலத்திற்கு தெற்கே 3-மைலில் (12) திருச்சேறை இருக்கின்றது. சத்திரமுண்டு. ஹோட்டலுமிருக்கிறது. இங்கு ஒரு சிவஸ்தலமுமிருக்கின்றது.

குறிப்பு:—அரக்கன் கொண்டுபோன வைரமுடியை வைநதேயன் மீட்டுக்கொண்டு இவ்வழியே போகும்போது இங்குள்ள ஓர் அரக்கன் கருடனோடு சண்டை செய்யும் காலத்தில் வைரமுடியிலிருந்த மாணிக்கச் சிகரம் இதில்

விழுந்தபடியால் இதற்கு மணிமுக்தாநதி என்று பெயரா யிற்றென்பர். இப்போதும் வைரமுடிக்கு சிகரமில்லாமல் மொட்டையாயிருக்கிறது. இச்சந்நிதியில் வாகனரூபமாக சிலா கருடன் ஒன்று இருக்கிறது. பிரார்த்தனை முதலான வைகள் செலுத்துகிறார்கள். வரப்பிரசாதி. இதை ஆஸ்தானத் திலிருந்து நான்கு அர்ச்சகர்கள் வெளிக்கொண்டு வந்தபிறகு 16-பிராமணர்களால் எடுத்து மண்டபத்தில் வைத்து 32 பிராமணர்களால் மஹாமண்டபத்திற்கு கொண்டுவந்துபெரு மாள் ஆரோகணித்தபிறகு 200 ஸ்ரீபாதந்தாங்கிகளால் திரு வீதி உற்சவம் செய்யப்படுகிற மாஹாத்மியமுள்ளதாம். மார் கழி முக்கோடித் துவாதசி காலையில் ஒரு தடவையும்; மாசி பிரமோற்சவத்தில் இரவு ஒருதடவையும் வெளியே வரு கிறது.

9-1-57

## 21 - நந்திபுரவிண்ணகரம். (நாதன் கோயில்)

15-1-66

ப்ரபாவம்—விண்ணகரப்பெருமாள், ஜகந்நாதர் நாதநாதப்பெரு மாள், சண்பகவல்லி நாச்சியார், மந்தார விமானம், நந்தி தீர்த்தம் மேற்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், சந்நதிக்கும் சிபிசக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களா சாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது கும்பகோணத்திலிருந்து தெற்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலிலும் நாச்சியார் குடியிலிருந்து மேற்கே 3-மைலிலும் இருக்கிறது. இத்திருப் பதிக்கு கிழக்கே 1-மைலில் நந்திவனமென்னும் பெருமாள் கோயில் கிலமடைந்திருக்கின்றது. இது நந்தி தபசு செய்த இடமாம். 21-2-57

## 22 - திரு இந்தளூர் (திருவழுந்தூர்)

19-10-65

ப்ரபாவம—சுகந்தவந நாதன், மருவினிய மைந்தன், சந்திர விமோசநாச்சியார், புண்டரீகவல்லி நாச்சியார், வேதசக்ரவி

இர் புஷ்கரணி, காவேரி நதி, கிழக்கே திருமுகமண்டலம், வீரசயனம் சந்திரனுக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—மாயவரம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கே மட்சாலைமார்க்கமாய் 3-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு சத்திரங்களும் ஹோட்டல்களும் இருக்கின்றன. மாயவரத்தில் 2-சத்திரங்களும் 6-ஹோட்டல்களும் பல காபி கிளப்புகளுமிருக்கின்றன. மாயவரம் ஸ்டேஷனுக்கு கிழக்கில் 2-மைலில்மயிலாடுதுறை என்னும் சிவஸ்தலமிருக்கின்றது.

இவ்விடத்தில் துலாமாதத்தில் காவேரிஸ்நாநம் பகு விசேஷம். பிரமோத்சவம். பங்குனியில் உத்திரம் தீர்த்தம்.

5-12-55 7-12-56 -9-57 6-58 -11-56 -7-57 -9-59 10- -1-60

## 23 - தில்லைத்திருச்சித்திரகூடம் (சிதம்பரம்)

ப்ரபாவம்—கோவிந்தராஜப்பெருமாள், புண்டரீகவல்லி நாச்சியார், ஸாத்விகவிமாநம், புண்டரீக ஸரஸ்ஸு, கிழக்கேதிருமுகமண்டலம், போகசயநம் சிவன்முதலிய தில்லை மூவாயிரவர்க்கும் கண்வர்க்கும் ப்ரத்யக்ஷம். தேவர்கள் கொலுவீற்றிருந்த இடம். குலசேகராழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது சிதம்பரம் ஸ்டேஷனுக்கு வடமேற்கே கற்சாலைமார்க்கமாய் 1-மைலிலிருக்கிற சிதம்பர சிவாலயத்திற்குள் இருக்கிறது. வண்டிகள் உண்டு 50-சத்திரக்களும் 5-ஹோட்டல்களும் இருக்கின்றன. இதற்கு மேற்கே 24-மைலில் ஸ்வயம்வ்யக்த ஸ்தலமாகிய ஸ்ரீ முஷ்ணமும் தென்மேற்கே 16-மைலில் காட்டு மன்னார் குடியும் இருக்கின்றன. இவ்விடங்களுக்கு செல்லுவதற்கு வண்டிகளும் தபால்வண்டிகளுமுண்டு.

## 24 - காழிச்சீராம விண்ணகரம் (தாடாளன் சந்நிதி)

-56

ப்ரபாவம்—தாடாளன், திருவிக்கிரமமூர்த்தி, மட்டவிழுங் நாச்சியார், புஷ்கலாவர்த்த விமாநம், சக்ரதீர்த்தம், சங்கபுஷ்

~~-65~~ 25-12-56, 15-10-65

காணி கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம். அஷ்டகோணமகரிஷிக்குப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இதுசீகாழி ஸ்டேஷனுக்கு கிழக்கே ½-மைலில் இருக்கிறது. 2-சத்திரங்களும் 4-ஹோட்டல்களுமிருக்கின்றன. சந்நிதியிலும் பிரசாதம்கிடைக்கும்.

### 25 - கூடலூர் (ஆடுதுறை பெருமாள்கோயில்) 29-1-57 16-1-66

ப்ரபாவம்—வையங்காத்தபெருமாள், பத்மாசனவல்லிநாச்சியார், சுத்தசத்வவிமாநம், சக்ரதீர்த்தம், காவேரிநதி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், நந்தகமாமுனிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-கும்பகோணத்திற்கு மேற்கே 13-மைல் தூரத்திலுள்ள ஐயம்பேட்டை ஸ்டேஷனிலிருந்து ¾-மைலிலிருக்கும் சிவஸ்தலமாகிய சக்ரபள்ளியை அடைந்து வடக்கே மட்சாலைமார்க்கமாய் 2½-மைல் தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். குடமுருட்டி காவேரி நதிகளுக்கு பரிசல்களுண்டு. கண்டியூரிலிருந்து வடக்கே கற்சாலை மார்க்கத்தில் 1-மைலிலிருக்கும் திருவையாற்றை யடைந்து அங்கிருந்து கிழக்கே 7-மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். (திருக்கண்டியூரைப் பார்க்க) வண்டிகள் கிடையா. சத்திரமில்லை ஹோட்டலில்லை. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

### 26 - திருக்கண்ணங்குடி. 1-9-56 1-8-60

ப்ரபாவம்—ச்யாமளமேனிப் பெருமாள், அரவிந்தவல்லி நாச்சியார், உத்பலவிமாநம், ராவண புஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம், ப்ருகுகுசைத்யருக்கும் கௌதமருக்கும் ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். 21-6-65

மார்க்கமும் வசதிகளும்—இது திருவாரூருக்கு கிழக்கே 7-மைலிலுள்ள கீழ்வேளூர் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு சத்திரமில்லை; ஹோட்டலுமில்லை. முன்சொல்லி வைத்தால் சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

இத்தலத்தில் நல்லநீர் இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்குங்காலத்தில் அவ்வூர் வெட்டியாரப்பையன் திருமங்கையாழ்வாரைப் பின்தொடர்ந்து அவர் அநுக்ரகத்தால் குறிப்பாய் கல்லெறிந்தவிடமான சந்நிதிக்கு பின்புறம் நல்லதீர்த்தக்குளம் ஒன்று தோன்றிற்று. இப்பவும் இக்குளம் தவிர வேறு யிடங்களில்கிணறுதோண்டினாலும் நல்லசலம் வராது. கலியனது சாபம் ஊருக்கிணர் எனப்படும்.

## 27 - திருக்கண்ணமங்கை. 2-9-56 12-3-65

ப்ரபாவம்—பக்தவத்ஸலப் பெருமாள், அபிஷேகவல்லித் தாயார் உத்பலவிமாநம், தர்சநபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், வருணனுக்கும், உரோமசனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே 1-மைலிலுள்ள திருவாரூரை அடைந்து அங்கு நின்றும் மேற்கே மட்சாலைமார்க்கமாய் 4-மைல்சென்றால் இத்தலத்தையடையலாம். திருவாரூருக்கு மேற்கிலுள்ள குளிக்கரை ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே 2-மைலிலுள்ள அம்மையப்பன் ஊரை அடைந்து அங்கு நின்றும் கிழக்கே 1½-மைல்தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். வண்டிகளுண்டு சத்திரமில்லை சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

பிரமோத்சவம். சித்திரைமாதத்தில் பௌர்ணமியில் தீர்த்தம். சுவாமி சந்நிதியில் ஒரு தேன்கூடு இருக்கின்றது.

ருஷிகள் தேன் ஈக்கள்போல் உருவெடுத்து பூசித்ததாகச் சொல்லுகிறுர்கள். இந்த தேன் கூட்டுக்கும் பூசை நடக்கிறது.

## ✓ 3-1-66 28 - கவித்தலம். 29-1-57

ப்ரபாவம்—கஜேந்திரவரதர், ரமாமணிவல்லி நாச்சியார், பொற்ருமரையாள் நாச்சியார், ககநாக்ருதிவிமாநம், கஜேந்திரபுஷ்கரணி, கபிலதீர்த்தம், காவேரிநதி கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம் கஜேந்த்ரனுக்கும், ஆஞ்சநேயருக்கும் ப்ரத்க்ஷம். திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது கும்பகோணத்திற்கு மேற்கே 9-மைலிலுள்ள பாபநாசம் ஸ்டேஷனிலிருந்து வடக்கே 2-மைலிலிருக்கிறது. மார்க்கத்திலிருக்கும் குடமுருட்டி சிற்ருறு அரசிலாறு காவேரியாகிய நான்கு ஆறுகளையும் மழைகாலங்களில் பரிசலால் கடக்கவேண்டும். ஆடுதுறை பெருமாள் கோயிலிலிருந்து கிழக்கே மட்சாலைமார்க்கமாய் 4-மைலிலிருக்கிறது. இதற்கு வடகிழக்கே உமயாபுரம் மட்சாலைமார்க்கமாய் 4-மைலில் தொண்டரடிப் பொடியாழ்வார் அவதாரஸ்தலமாகிய திருமண்டங்குடி இருக்கிறது. வண்டிகள் கிடையா. சத்திரங்களிருக்கின்றன. ஹோட்டலில்லை. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

## ✓ 29 - திரு வெள்ளியங்குடி. 25-3-57 14-1-66

ப்ரபாவம்—கோலவில்லிராமன், மரகதவல்லி நாச்சியார், புஷ்பலவர்த்தக விமாநம், சுக்கிரபுஷ்கரணி, ப்ரஹ்மதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், சுக்கிரனுக்கும், பிரமனுக்கும் பராசருக்கும் இந்திரனுக்கும் ப்ரதயக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

இச்சந்நிதியில் எழுந்தருளியிருக்கும் கருடாழ்வார் சங்குசக்கர ஹஸ்தத்துடன் வீற்றிருக்கின்ருர். ஐதிஹ்யம் தெரியவில்லை.

மார்க்மும் வசதிகளும்—திருவிடை மருதூர் ஸ்டேஷ னிலிருந்து வடக்கே வேப்பத்தூர் கற்சாலைமார்க்கமாய் 5 மைலிலிருக்கும் ஆனைக்குடியை அடைந்து கிழக்கேதிரும்பி 1-மைல்தூரம்சென்றால் இத்தலத்தை யடையலாம்; கும்ப கோணத்திலிருந்து வடகிழக்கே காவேரியின் வடகரை மட்சாலை மார்க்கமாய் 5-மைலிலிருக்கும் வேப்பத்தூரை யடைந்து வடக்கே திரும்பி 2-மைலிலுள்ள ஆனைக்குடிக்கு வந்து பின்னும் கிழக்கே 1-மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். இத்தலத்திற்கு வடக்கேவாப்பு மார்க்கமாய் 1-மைலில் பெரியவாச்சாம்பிள்ளை அவதாரஸ்தலமாகிய செங்கநல்லூர் இருக்கிறது. இரண்டு ஸ்டேஷன்களிலிருந்தும் யானைகுடி வரையில்தான் வண்டிவரும். சத்திரமும் ஹோட்டலுமில்லை. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். திருவிடைமருதூரில் 3-சத்திரங்களும் 2-பிராமணர்கள் ஹோட்டல்களுமிருக்கின்றன.

## 30 - மணிமாடக்கோயில் (திருநாங்கூர்)

30-1-57 14-10-65

[illegible]—நந்தாவிளக்குப்பெருமாள், நாராயணர், புண்டரீகவல்லி நாச்சியார். ப்ரணவவிமானம், இந்திரபுஷ்கரணி, ருத்ரபுஷ்கரணி கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஏகாதச ருத்திரருக்கும், இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது வைதீசுவரன் கோயில் ஸ்டேஷனுக்கு வடகிழக்காக 4-மைலிலிருக்கிறது. இது திருநாங்கூர் ஆறுஸ்தலங்களில் முதலாவது. திருவாலியிலிருந்து தெற்கே 2-மைலிலிருக்கிறது. திருவாலி மார்க்கம் பார்க்க. இங்கிருந்து 2-மைலில் காவளம்பாடி இருக்கிறது. வண்டிகளுண்டு. இராமாநுஜகூடமிருக்கின்றது. சத்திரமும் ஹோட்டலுமில்லை. சந்நிதியில் சொல்லிவைத்தால் ததியோதநம்

கிடைக்கும். வைதீசுவரன் கோயிலில் 2-சத்திரங்களும் 13-ஹோட்டல்களுமிருக்கின்றன. இத்தலம் முன்பு பெரியபட்டணமாக இருந்திருக்கவேனும் இப்போது ஒருசிறிய கிராமமாயிருக்கிறது.

திருநாங்கூரிலுள்ள ஆறுதிருப்பதிகளாவன. (30) மணிமாடக்கோயில் (31) வைகுந்த விண்ணகரம் (32) அரிமேய விண்ணகரம் (34) வண் புருஷோத்தமம் (35) செம்பொன் செய்கோயில் (36) திருத்தெற்றியம்பலம்.

குறிப்பு:— இந்த திவ்ய தேசங்களை சேவிக்குமிடத்தில் ஒரு அர்ச்சகரே இரண்டு மூன்று சந்நிதிகளுக்கு ஆராதனை செய்பவராயிருப்பதால் அவருடன் சென்றே சேவிக்க வேண்டிதாயிருக்கின்றது.

பிரதி சம்வஸ்சரந்தோறும் வாராநின்ற, தைமாதத்திய அமாவாசையன்று, திருநகரியினின்றும், திருமங்கையாழ்வார் திருப்பல்லக்கில் எழுந்தருளி, திருக்குறைலூர் சென்று வாடினேன் வாடி என்ற பாசுரத்தை அங்கு நின்று சேவித்துப் பஞ்சநரசிம்ம மூர்த்திகளையும் தியானித்துப், பால் அம்லை கண்டருளி, பின்பு மங்கைமடம் அணுகி அங்கண் ஞாலம் என்றெடுத்து சிங்கவேழ்குன்று முதலிய வடநாட்டுத் திருப்பதிகளை மங்களாஸாசனம் புரிந்துவிட்டு, திருக்காவளம்பாடி, திருமணிக்கூடம், திருப்பார்த்தன்பள்ளி, இவைகட்கு முறையேசென்று, அந்தந்த ஸ்தலங்களைச்சேவித்துப் பாடிக்கொண்டு மணிகர்ணிகை என்னும் திருக்காவிரியின் கிளை நதியில் மஞ்சக்குளி மண்டபம், அடைந்து திருமஞ்சனம் கண்டருளி திருவரங்கேசனை துலங்குநீண்முடி என்ற பாசுரங்களினாலும், அங்கிருந்தே திருநறையூர் நம்பிகளையும் குலையார்ந்த என்ற பாசுரங்களினாலும், மங்களாசாஸ

நம் புரிந்துக்கொண்டு இங்கு (திருநாங்கூருக்கு) எழுந்தருளி இவ்வாறு திருப்பதிகளையும் பாடிக்கொண்டு மீண்டும் மணி மாடக்கோயிலில் எழுந்தருளியிருந்து, தோத்தரித்தவளவில் அப்பதினொரு திருப்பதி யெம்பெருமான்களும், ஆங்கண் எழுந்தருளி கருடாரூடர்களாய், ஆழ்வாருக்கு காக்ஷியளித்த ருளப்பெற்று, பின்னர், பரகாலர் மறுநாள், திருவெள்ளக் குளம், திருத்தேவனார்த்தொகைகளை சேவித்து மங்களா சாஸநம் செய்துகொண்டு திருவாலியை அடைய அங்கு வயலாலிமணாளனும் கருடாரூடராய் எழுந்தருளிச் சேவை சாதிக்கப்பெற்று நம் திருமங்கைமன்னன் திருநகரியை அடைகிறார். இந்த துவாதசகருடசேவை மகோத்சவப் பிர பாவத்தை வரையறுத்துக்கூறுதல் சாத்தியமாகா.

30-1-57 31 - வைகுந்த விண்ணகரம். ✓
20-8-56, 14-10-65

ப்ரபாவம்—வைகுந்தநாதன், தாமரைக்கண்ணுடைய பிரான். வைகுந்தவல்லி நாச்சியார், அநந்தஸத்திய வர்த்தகவிமாநம். லட்சுமி புஷ்கரணி, உதங்கபுஷ்கரணி, விரஜை, கிழக்கே. திருமுகமண்டலம் வீற்றிருந்த திருக்கோலம், உபரிஸரவசுராஜாவுக்கும், உதங்கமக ரிஷிக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்,

மார்க்கமும் வசதிகளும்—இது திருவாங்கூர் ஆறு ஸ்த லங்களில் சேர்ந்தது.

30-1-57 32 - அரிமேய விண்ணகரம். ✓
20-8-58, 14-10-65

ப்ரபாவம்-குடமாடுகூத்தப்பெருமாள், அம்ருதகடவல்லி நாச்சி யார், உச்சச்ருங்கவிமாநம், கோடிதீர்த்தம், அமுததீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், உதங்கமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இதுவும் திருநாங்கூர் ஆறு ஸ்தலங்களில் சேர்ந்தது.

33 - திருத்தேவனார் தொகை, (கீழைச்சாலை) 30-1-57
14-10-65

ப்ரபாவம்—மாதவப்பெருமாள், தெய்வநாயகப்பெருமாள், கடல் மகள் நாச்சியார், சோபநவிமாநம், சோபநபுஷ்கரணி, தேவஸபா புஷ்கரணி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், வஸிஷ்டருக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது திருநாங்கூரிலிருந்து வடக்கே வாய்ப்புமார்க்கமாய் 2-மைலில் உள்ளது. அண்ணன் கோயிலுக்கு கிழக்கே $\frac{1}{2}$-மைலிலிருக்கிறது.

34 - வண்புருடோத்தமம். 30-1-57
14-10-65 20-8-58

ப்ரபாவம்—புருஷோத்தமப்பெருமாள், புருஷோத்தம நாயகி சஞ்சீவிக்ரஹவிமாநம், திருப்பாற்கடல்தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், உபமந்யுவுக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இதுவும் திருநாங்கூரில் உள்ளது.

35 - செம்பொன் செய்கோயில். 30-1-57
14-10-65 20-8-58

ப்ரபாவம்—பேரருளப்பெருமாள், அல்லிமாமலர் நாச்சியார் கநகவிமாநம், கநகதீர்த்தம், நித்யபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், ருத்திரனுக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இதுவும் திருநாங்கூரில் உள்ளது.

36 - திருத்தெற்றியம்பலம். 30-1-57
14-10-65 20-8-58

ப்ரபாவம்—செங்கண்மால், செங்கமலவல்லி நாச்சியார், வேத விமாநம், சூர்யபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், செங்கமலவல்லி நாச்சியாருக்கும் அநந்தனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்

மார்க்கமும் வசதிகளும்-இதுவும் திருநாங்கூரிலுள்ளது.

7-8-57
14-10-65

### 37 - திருமணிக்கூடம்:

ப்ரபாவம்—மணிக்கூடநாயகன், திருமாமகள் நாச்சியார், கநக விமாநம், சந்திரபுஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம். பெரியதிருவடிக்கும் சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது திருநாங்கூருக்கு கிழக்கே 1-மைலிலிருக்கிறது. காவளம்பாடிக்கு தெற்கே 3-மைலிலிருக்கிறது. சந்நிதி தவிர வேறுவசதி கிடையாது.

7-8-57
14-10-65

### 3௮ - காவளம்பாடி.

ப்ரபாவம்—கோபாலக்ருஷ்ணன், மடவரல்மங்கைநாச்சியார். செங்கமலநாச்சியார், ஸ்வயம்புவிமாநம், தடமலர்ப்பொய்கை, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், சேனைத்தலைவருக்கும் மித்திர தேவருக்கும் ருத்திரருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது திருநகரிலிருந்து தெற்கே திருவெண்காடு மட்.சாலைமார்க்கத்தில் $1\frac{1}{2}$-மைலிலிருக்கிறது. வசதிகள் ஒன்றுமில்லை,

30-1-57
14-10-65

### 39 - திருவெள்ளக்குளம் (அண்ணன்கோயில்)

ப்ரபாவம்—கண்ணன் நாராயணன், பூவார்திருமகள் நாச்சியார் தத்வதோதகவிமாநம், வெள்ளக்குளத்தீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், இக்ஷ்வாகுவம்சத்தில் ச்வேதராஜனுக்கும் ருத்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது திருத்தேவனார் தொகையிலிருந்து மேற்கே $\frac{1}{2}$-மைலிலிருக்கிறது.

இது சீகாழியிலிருந்து தென்கிழக்காய் திருக்கடையூர் மட்சாலை மார்க்கத்தில் 5-மைலிலிருக்கிறது. வண்டிகள் அகப் படும். மற்ற சௌகரியங்கள் ஒன்றுமில்லை. வைதீசுவரன் கோயிலுக்கு கிழக்கே 7-மைலிலிருக்கிறது.

## 40 - பார்த்தன்பள்ளி. 31-1-57 16-10-65

ப்ரபாவம்—தாமரையாள் கேள்வன், தாமரைநாயகி, நாராயண விமாநம், சங்கஸரஸ்ஸு, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக் கோலம், பார்த்தனுக்கும் வருணனுக்கும் ஏகாதசருத்ரருக்கும் ப்ரத் யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது திருநாங்கூரிலிருந்து தென்கிழக்கே சாலைமார்க்கமாய் 2-மைலிலிருக்கிறது. சௌக ரியங்கள் கிடையா.

சோழநாட்டுத் திருப்பதிகள்
முற்றுப்பெற்றன.

---

# பாண்டியநாட்டுத் திருப்பதிகள்-கஅ.

## 41 - திருமாலிருஞ் சோலைமலை (அழகர் கோயில்) 7-9-59 24-6-65

ப்ரபாவம்—அழகர், மாலலங்காரர், சுந்தரவல்லிநாச்சியார், சோமசுந்தரவிமாநம், சிலம்பாறு, வ்ருஷபகிரி, சந்தனவிருக்ஷம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், மலயத்வஜ பாண்டியனுக்கும் தர்மதேவதைக்கும் ப்ரத்யக்ஷம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்க ளாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது மதுரையிலிருந்து வட கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 12-மைலில் மலை அடிவாரத் திலிருக்கிறது. மலைமேலிருக்கும் நூபுரகங்கை சந்நிதிக்கு வடக்கே ௩-மைலிலிருக்கிறது. இதற்கு தெற்கே 10-மைல்

தூரத்தில் (46) திருமோகூர் இருக்கிறது. அழகர் கோயி லிலுக்கு கிழக்கே 10-மைலிலிருக்கும் மேலூர் மார்க்கமாய் திருப்புத்தூரையடைந்து, (42) திருக்கொட்டியூருக்கும், (43) திருமெய்யத்திற்கும் போகலாம். சந்நிதியைச்சுற்றி முன்றுமைல் காடாகையால் சந்நிதியிலேயே தங்கவேண் டும். பசனம்முதலானது செய்துகொள்ளலாம். சந்நிதியில் ப்ரசாதம்கிடைககும். வண்டிகளுண்டு. (47) திருக்கூடலைப் பார்க்க.

ஆடிமாதத்தில் பூர்ணிமா இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவமும் சித்திரா பௌர்ணமியில் அழகர் மதுரை வைகையாற்றுக்கு எழுந்தருளும் பெரிய உத்சவம் ஜகத்ப்ர சித்தம். இந்தமலையின் மிசை 3-மைல்தூரத்தில் பாதைவழி யாகப் பெருகிவரும் நூபுரகங்கை சிலவிடங்களில் வேக மாயும், சிலவிடங்களில் மெதுவாயும், சிலவிடங்களில் இடறி விழுவதுபோலவும், சிலவிடங்களில் மிகுந்த நுரையோடும மறறுஞ்சில விடங்களில் அட்டகாசத்துடன் உயர்ந்த பாகத் திலிருந்து விழுந்துகொண்டும் வருவதைப் பார்த்தால் வெகு ரமணியமாயிருக்கும். இந்த அருவி விழுமிடத்தில் திரு மஞ்சனமண்டபமொன்று கட்டப்பட்டிருக்கிறது. ஆழ்வார் பாசுரங்களிலும் ஆழ்வான் ஸ்தோத்திரத்திலும் அழக ருடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் வைபவங்கள் விசேஷ மாக சொல்லப்பட்டிருக்கின்றன. பெருமாளை நேரில் சேவிப் பவர்களுக்குத்தான் அவை நன்குவிளங்கும்.

"அவ்வழிப் படரி ராயி னிடத்துச்
செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றுந்
தடந்தாழ் வயலொடு தண்பூங் காவொடு
கடம்பல கிடந்த காடுடன் கழிந்து
திருமால் குன்றத்துச் செல்குவி ராயிற்
பெருமால் கெடுக்கும் பிலமுண்டு.

விண்ணோரேத்தும் வியத்தகு மாபிற்
புண்ணிய சாவணம் பவகா ரணியோ
டிட்ட சித்தி யெனும்பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுள.
புண்ணிய சாவணம் பொருந்துவி ராயின்
விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்
பவகா ரணிபடிந் தாடுவி ராயிற்
பவகா ரணத்திற் பழம்பிறப் பெய்துவிர்
இட்ட சித்தி யெய்துவி ராயி
னிட்ட சித்தி யெய்துவிர் நீரே."

என்று சிலப்பதிகாரத்தில் தீர்த்த மஹிமை நன்கு வருணிக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஸ்தலத்தையும் திருப்பதியையும் குமரன்குன்று தோருடலில் ஒன்றுஎன்று சொல்லுபவர்கள் காணுமாறு இந்தப்பாடலை இங்கு அமைத்துளேன். திருப்பதிவிஷபத்தை (96)திருவேங்கடத்தில் கண்டுகொள்ளலாகும்.

இச்சந்நிதியின் கோபுரவாயிலில் 18-ஆம் படியில் கருப்பண்ணன் காவலாயிருக்கின்றான். மதுராநகரில் யாராவது ப்ரமாணம் பண்ணுவதாயிருந்தால் இப்படிகளை ஏறி இறங்கச் சொல்லுவது வழக்கம். கருப்பண்ணன் என்பவன் மலையாளத்திலிருந்து அழகர் மலையில்வந்து பெருமாளின் திருவாபரணங்களைத் திருடவந்த பதினெட்டு கள்ளரின் பெரியவன். இந்தக் கள்வரை பெருமாள் தனித்தனி ஒவ்வொரு படிக்கு பலியிட்டு கடைசியவனுகிய கருப்பண்ணனை அவன் வேண்டுகோளுக்கிணங்கி அவனைக்கொல்லாது சந்நிதியைக் காற்கக் கட்டளையிட்டார். அதனுல் இவனை பதினெட்டாம் படிக் கருப்பன் என்பர்.

24-8-65 42 - திருக்கோட்டியூர். 5-4-58

ப்ரபாவம்—ஸௌம்யநாராயணன், திருமாமகள் நாச்சியார், அஷ்டாங்கவிமாநம், தேவபுஷ்கரணி. கிழக்கே திருமுகமண்டலம், நின்றும் இருந்தும் நடந்தும் கிடந்தும் கூத்தாடியும் திருக்கோலம், கதம்ப மஹரிஷிக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். திருக்கோட்டியூர் நம்பி அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்—மதுரைக்கு கிழக்கே 30-மைலியுள்ள மானமதுரை ஸ்டேஷனிலிறங்கி வடக்கே கற்சாலை மார்க்கமாய் 11-மைலிலிருக்கும் சிவகங்கையை அடைந்து பின்னும் 16-மைல் வடக்கே கற்சாலை மார்க்கமாய்ச் சென்றால் இத்தலத்தையடையலாம். ஸ்டேஷனிலிருந்து சிவகங்கை வரையிலும் ஜட்கா வண்டிகள் உண்டு. சிவகங்கையிலிருந்து இரட்டைமாடு வண்டிகள் அகப்படும். இங்குச் சத்திரமும் ஹோட்டலும் இருக்கின்றன. சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும். இங்கிருந்து வடமேற்கே 6-மைலிலிருக்கும் சிவஸ்தலமாகிய திருப்புத்தூரை அடைந்து பின்னும் வடக்கே கற்சாலைமார்க்கமாய் 15-மைல் தூரம் சென்றால் (43) திருமெய்யம் அடையலாம். மதுரையிலிருந்து கிழக்கே கற்சாலைமார்க்கமாய் 7-மைலிலிருக்கும்(46) திருமோகூரைச் சேர்ந்து அங்கிருந்து கற்சாலைமார்க்கமாய் 11-மைலிலுள்ள மேலூரை அடைந்து பின்னும் வடகிழக்கே கற்சாலைமார்க்கமாய் 18-மைலிலுள்ள திருப்புத்தூருக்கு வரலாம். திருப்புத்தூருக்கு தெற்கே 6-மைலில் (42) திருக்கோட்டியூரும் வடக்கே 15-மைலில் (43) திருமெய்யமும் இருக்கின்றன. திருமெய்யத்திலிருந்து வடக்கே 12-மைலில் புதுக்கோட்டையிருக்கிறது. புதுக்கோட்டையிலிருந்து வடக்கே 33-மைலில் திருச்சிறுப்பள்ளியிலிருக்கிறது. மதுரையிலிருந்து மேலூ

ருக்கும் மேலூரிலிருந்து திருப்புத்தூருக்கும் இரட்டை மாட்டு வண்டிகள் அகப்படும். மானமதுரையிலும் சிவகங்கையிலும் திருப்புத்தூரிலும் சத்திரங்களும் ஹோட்டல்களுமிருக்கின்றன.

குறிப்பு:—இத்தினால் ஆராதிக்கப்பட்ட பெருமாள் ரஜிதவிக்ரகமாய் எழுந்தருளி இருப்பதால் இவ்வூரிலுள்ளவர்கள் வெள்ளி ஆபரணங்களை காலில் அணிவதில்லை. கோபுரமிசையிலிருந்து திருமந்திரத்தை வெளியிட்ட காரணத்தினால் உடையவர் விக்கிரகம் கோபுரமிசை வைக்கப்பட்டிருக்கிறது. சித்திரைமாதத்தில் சித்திரை நக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம்.

4-9-65 13 - திருமெய்யம். 27-8-55

ப்ரபாவம்—சத்யகிரிநாதன், உய்யவந்தாள், சத்யகிரிவிமானம், சத்யகிரி, சத்யதீர்த்தம், கதம்பபுஷ்கரணி, பலாவிருக்ஷம். தெற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், சத்ய தேவதைகளுக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—திருச்சினாப்பள்ளி ஜங்ஷனிலிருந்து தெற்கே கற்சாலை மார்க்கமாய் 33-மைலிலுள்ள புதுக்கோட்டையை அடைந்து பின்னும் தெற்கே 12-மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். தஞ்சாவூரிலிருந்து தென் மேற்கே 35-மைலிலுள்ள புதுக்கோட்டையை அடைந்தும் இங்குவரலாம். இங்கு நாட்டுக்கோட்டையார் சத்திரம் ஒன்றுண்டு. இரண்டு பிராமணர்கள் ஹோட்டல்களும் இரண்டு சைவர்கள் ஹோட்டல்களும் இருக்கின்றன சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். திருச்சினாப்பள்ளிக்கும் புதுக்கோட்டைக்கும் மோடார்வண்டி உண்டு. திருச்சினாப்பள்ளியிலிருந்தும் தஞ்சாவூரிலிருந்தும் புதுக்கோட்டைக்கு ஜட்காவண்டிகள் பறக்கின்றன. புதுக்கோட்டையிலிருந்து

இத்தலத்திற்கு ஜட்காவும் மாட்டுவண்டிகளும் அகப்படும். திருமெய்யத்திலிருந்து தெற்கே 15-மைலில் திருப்பத்தூர் சிவஸ்தலம் இருக்கிறது. இதற்கு தெற்கே 6-மைலில் (42) திருக்கோட்டியூர் இருக்கிறது. உத்சவம்:—வைகாசி திருவோணத்தில் தீர்த்தம் இங்குஹைமயன் ஒளித்திருந்த இடமும் பார்க்கத்தக்கது.

21-2-60 15-12-60 17-9-65

## 44 - திருப்புல்லாணி. (தர்ப்பசயநம்)

ப்ரபாவம்—கல்யாண ஜகந்நாதன். தெய்வச்சிலையார், தெய்வச்சிலை நாச்சியார், கல்யாணவல்லி நாச்சியார், கல்யாண விமாநம், ஹேமதீர்த்தம். சக்ரதீர்த்தம் அசுவத்தவிருக்ஷம். கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம். புல்லாரணியக்ஷேத்திரம், தர்ப்பசயநம், புல்லாரணிமகாரிஷிக்கும் அச்வத்த நாராயணனுக்கும் ப்ரத்யக்ஷம். சக்ரவர்த்தி திருமகன் சமுத்ரராஜனுக்கு வரங்கொடுத்தவிடம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது மதுரையிலிருந்து தனுஷ்கோடிக்குச் செல்லும் ரயில்பாதையில் 67-மைலிலுள்ள ராமநாதபுரம் ஸ்டேஷனிலிருந்து தெற்கே மட்சாலைமார்க்கமாய் 5-மைலிலிருக்கிறது. இங்கிருந்து ஆதிசேது (சமுத்திரஸ்நானகட்டம்) தெற்கில் 3-மைலிலிருக்கிறது. பார்த்தமாத்திரத்தில் பாபங்களனைத்தையும் போக்கவல்ல சேது இதுதான். வண்டிகளுண்டு சத்திரங்களுண்டு.

குறிப்பு:—ஸ்ரீமந்நாராயணனது ஸ்ரூபமேயென்று சாஸ்திரங்களால் ஓதப்படுவதும் தம்மைக்குறித்து தவம்புரிந்த புல்லர் முதலிய ரிஷிகளுக்கும் பிரமனுக்கும் தன்னுடைய மூலத்தில் பரமாத்மா ப்ரசந்நமாகும் பாக்கியம் பெற்றதும் உலகெல்லாம் தம்மை தரிசித்துக் கடைதேறும்பொருட்டு பரம கருணையால் பகவான் தன் அடியில் அர்ச்சாரூபியாய் எழுந்தருளியிருக்கப்பட்டதும் தன் நிழலில் நாகப்ரதிஷ்டை

செய்வோருக்கு மக்கள் பேறு உண்டாக்கும் சக்தியையுடையதும் மிக ப்ரசித்தம் பொருந்தியதுமான அஸ்வத்த விருக்ஷம் இந்த க்ஷேத்திரத்திலிருக்கிறது. இத்தலத்தில் பிள்ளையில்லாதவர்கள் நாகப்ரதிஷ்டை செய்தால் மகப்பேறு பெறுவர்கள் என்பது புராண ப்ரஸித்தம். இங்குள்ள நாகப்ரதிஷ்டைபோல் எங்குங் கண்டதில்லை. பெருமாள் உகந்து அமுது செய்யும் திருக்கண்ணமுது என்னும் அருமையான பாயசம் யாத்திரைவாசிகளால் அவசியம் புசிக்கத்தக்கது.

### ✓ 45 - திருத்தண்காலூர். (திருத்தங்கால்) 1-8-56 25-8-65

ப்ரபாவம்—அப்பன், தண்காலப்பன், அன்னநாயகி, அநந்தநாயகி நாச்சியார் நால்வர், தேவசந்திரவிமானம், பாபவிநாசதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், சல்லிய பாண்டியனுக்கும் ஸ்ரீவல்லபனுக்கும் புலிக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் பூதத்தாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—மதுரைக்குத் தெற்கே 44-மைலிலுள்ள சாத்தூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே கற்சாலை மார்க்கமாய் 12-மைலிலுள்ள சிவகாசியை அடைந்து வடக்கே திரும்பி 2-மைல்தூரஞ்சென்றால் இத்தலத்தையடையலாம். துலுக்கப்பட்டி ஸ்டேஷனிலிருந்து மேற்கே 7-மைலிலிருக்கிறது. வழி வரப்பு மார்க்கமாகையால் நடப்பவர்களுக்கு மாத்திரம் சுலபம். சாத்தூரிலிருந்து சிவகாசி வரைக்கும் மாட்டுவண்டி கிடைக்கும். சிவகாசியிலிருந்து வேறுவண்டி. சத்திரமுண்டு- ஹோட்டலில்லை. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். சிவகாசியிலிருந்து பின்னும்மேற்கே 13-மைல் சென்றால் (48) ஸ்ரீவில்லிப்புத்தூரையடையலாம்.

### ✓ 24-8-65 46 - திருமோகூர். 8-4-56

ப்ரபாவம்—காளமேகப்பெருமாள். மோகூர் வல்லிநாச்சியார் மேகவல்லிநாச்சியார், கேதகிவிமானம், க்ஷீராப்திபுஷ்கரணி, கிழக்கே

திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், அஜருத்ரேந்த்ராதிகளுக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்,

மார்க்கமும் வசதிகளும்—இது மதுரையிலிருந்து வடகிழக்கே கற்சாலை மார்க்கமாய் 7-மைலிலிருக்கிறது. அழகர் மலையிலிருந்து தெற்கே 10-மைலிலிருக்கிறது. அழகரைச் சேவித்துக்கொண்டு இங்கு வந்து மதுரைக்கு வருவது ஜனங்களுக்கு வழக்கமாயிருக்கிறது. சத்திரமும் ஹோட்டலுமில்லை. வண்டிகள் அகப்படும். சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும். உத்சவம்-வைகாசி விசாகத்தில் தீர்த்தம்.

10-4-56. 47 - திருக்கூடல் (தென்மதுரை.) 26-8-65

ப்ரபாவம்—கூடலழகர், வகுளவல்லி நாச்சியார், மரகதவல்லி நாச்சியார், வருணவல்லி, மதுரைவல்லி. அஷ்டாங்கவிமாநம், ஹேமபுஷ்கரணி, சக்ரதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், சௌநகாதிகளுக்கும், ப்ருகுமஹாரிஷிக்கும், பெரியாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம்· திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிளுகம்—இது மதுரை ஸ்டேஷனுக்கு கிழக்கே 1-மைலில் இருக்கிறது. இது பெரியபட்டணமாகையால் சத்திரங்களும் ஹோட்டல்களும் கிளப்புகளும் அநேகம் உண்டு. இங்கிருந்து வடகிழக்கே 12-மைலில் (41) அழகர் கோயிலும் கிழக்கே 7-மைலில் (46) திருமோகூரும் இருக்கின்றன. உத்சவம் வைகாசி அநுஷம் பூர்ணிமா தீர்த்தம். மாசிமகம் இறுதியாகக்கொண்டு 10-நாள் தெப்போத்சவம்.

குறிப்பு:-இச்சந்நிதி மூன்று பெரியப்ராகாரங்களையுடையது. இரண்டாவது ப்ராகாரத்தில் நவக்ரகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. பெருமாள் சந்நிதிகளில் இதைத்

தவிர வேறெங்குமிலது. மூன்றும் ப்ராகாரத்தில் தாயார், ஆண்டாள், மணவாள மாமுனி சந்நிதிகள் இருக்கின்றன. இச்சந்நிதியின் அஷ்டாங்க விமாநம் மிகப்பெரியது. இவ்வளவு பெரிய விமாநம் எந்த திவ்யதேசத்திலுமில்லை. விமானத்தின் மேலடுக்கில் கிடந்த வண்ணமாய் அரங்கநாதனும் அதற்குமேலடுக்கில் நின்றவண்ணமாய் சூரிய நாராயணனும் எழுந்தருளியிருக்கின்றனர் இவைகளுக்கு படிகள் அழகாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்விடத்திலுள்ள மீனாக்ஷியம்மன்கோவிலும் திருமலை நாயகன் அரண்மனையும் தெப்பக்குளமும் பார்க்கத்தக்கவைகள். மதுரை ஆதிகால முதல் தென்னாட்டில் சிறந்தபட்டணமாயும் அநேக நூற்றாண்டுகளாக பாண்டிய அரசர்களின் இராஜதானியாயும் இருந்தது. இது வைகையாற்றின் தென்கரையிலிருக்கிறது. **135000** ஜனங்களுடைய முனிசிபல் பட்டணம். இது முன்னாளில் தமிழ் கல்விக்கு ஆஸ்தாநமாயிருந்தது. மூன்றாவது சங்கம் திருக்குறள் அருளிச்செய்த திருவள்ளுவர் காலத்தில் அழிந்துபோனதாக தெரியவருகிறது. இதை ஐரோப்பியர்கள் (The athens of southern India) என்பர். மீனாக்ஷியம்மன் கோவில் 846 அடி நீளமும், 744 அடி அகலமும், 9 பெரியகோபுரங்களையுடையதாயும் உள்ளது. இதில் பெரிய கோபுரம் 152 அடி உயரமுள்ளது இதிலுள்ள ஆயிரக்கால் மண்டபம் 1550-ஆம் வருஷத்தில் ஆரிய நாயகரால் கட்டப்பட்டது. இவ்விந்தியாவில் சிறந்த அழகானதும் சித்திரவேலைகளில் சிறந்ததுமான கோயில்களில் இது ஒன்று.

31-7-58 48 - ஸ்ரீவில்லிபுத்தூர். 25-8-65

ப்ரபாவம்-வடபத்ரசயநர், ரங்கமன்னார், ஆண்டாள், பெரிய திருவடி, கோதைநாச்சியார், ஸம்சநவிமாநம், திருமுக்குளதீர்த்தம்

கிழக்கே திருமுகமண்டலம், வடபத்ரசயநம், நின்றதிருக்கோலம், மண்டூகமஹரிஷிக்கும் பெரியாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் மங்களாசாஸனம். பெரியாழ்வார் ஆண்டாள் அவதரித்த தலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது மதுரைக்கு தெற்கே 44-மைலிலுள்ள சாத்தூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே கற்சாலை மார்க்கமாய் 25-மைலிலிருக்கிறது. மார்க்கத்தில் 12-வது மைலில் சிவகாசி இருக்கிறது. இத்தலத்திற்கு வடக்கே 11-மைலில் காட்டழார் கோயில் மலைமேலிருக்கிறது. வடக்கே 3-மைலில் ஸ்ரீநிவாசன் சந்நிதி இருக்கின்றது. (இது திருநெல்வேலி ஜில்லாவுக்கு திருவேங்கட மென்னும் திருப்பதிபோல் விளங்குகிறது) வண்டிகளுண்டு சத்திரமும் ஹோட்டலும் இருக்கின்றன.

## (49 - திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி)

ப்ரபாவம்—ஆதிநாதப்பெருமாள், பொலிந்துநின்ற பிரான், ஆதிநாதவல்லி, கோவிந்தவிமானம், தாம்ரபர்ணிநதி, பிரமதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், பிரமனுக்கும் நம்மாழ்வாருக்கும், மதுரகவிக்கும் ப்ரத்யக்ஷம் நம்மாழ்வார் மங்களாசாஸனம். நம்மாழ்வாரும் மணவாளமாமுனிகளும் அவதரித்ததலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது ஆழ்வார் திருநகரி ஸ்டேஷனிலிருந்து மேற்கே கற்சாலைமார்க்கமாய் ஒரு மைலில் இருக்கிறது. சத்திரமும் ஹோட்டலும் உண்டு. சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும். வண்டிகளுண்டு. இத்தலத்திற்கு மேற்கே 3-மைலில் தாம்பிரபாணிக்குவடகரையில் (54) ஸ்ரீவைகுண்டமும் இதற்கு கிழக்கே (55) வரகுண மங்கையும் (52) திருப்புளிங்குடியும் (56) திருக்குளந்தையுமிருக்கின்றன. திருநகரியை மத்தியமாகக்கொண்டு நவ திருப்பதிகளையும் சுலபமாகச் சேவிக்கலாம். இதற்கு கிழ

க்கே 16-மைலில் கிழ்சமுத்திரக்கரையில் ப்ரஸித்திபெற்ற ஸுப்ரமண்ய ஸ்தலமாகிய திருச்செந்தூர் இருக்கின்றது.

உத்ஸவம்:—சித்திரையில் உத்திரம் இறுதியாகக் கொண்டு 10-நாள் பெருமாளுக்கும் வைகாசியில் விசாகம் இறுதியாகக்கொண்டு 10-நாள் ஆழ்வாருக்கு சாத்துமுறை உத்ஸவமும் அதிவிபவமாய் நடைபெறுகின்றன. அத்யய னோத்ஸவமும் இச்சந்நிதியில் விசேஷம். ஆழ்வார் உத்ஸவத் தில் ஐந்தாம் நாள் காலையில் நவதிருப்பதி எம்பெருமான் களும் இங்கு யெழுந்தருளி திருமஞ்சநம் திருவாராதனை முதலியன கண்டருளப்பெற்று அன்றிரவு 11-மணிக்கு ஆழ் வார் ஹம்ஸாரூடராய் எழுந்தருளுதலும் நவதிருப்பதி எம் பெருமான்களும் கருடாரூடர்களாய் எழுந்தருளி வந்து ஆழ்வாருக்கு சேவைசாதித்தலும், ஆழ்வார் அவர்களுக்கு தனித்தனியாய் மங்களாஸாஸனம் செய்தருளின பின்பு ஆழ் வார் முன்பேயும் பெருமாள்கள் பின்னேயும் விபவதிருக் கோலத்துடன் திருவீதி உத்ஸவம் கண்டருளுவதை ஊனக் கண்களால் கண்டு சமுக்குநாக்கொடு சொல்லப்போமோ? ஆழ்வார் பரமபதம் எழுந்தருளும்போது அநுபவித்த சூழ் விசும்பு முனியே நான்முகனே யென்கிற திருவாய் மொழி களின்படி பரமபதத்தின் அநுபவத்தை நாம் இங்கே காண லாகுமே!

6-9-65 10-8-

## 50 - துலைவில்லிமங்கலம். (இரட்டைத்திருப்பதி)

ப்ரபாவம்-தேவபிரான், அரவிந்தலோசநன், கருந்தடங்கண்ணி நாச்சியார், குமுதவிமாநம், வருணதீர்த்தம், தாம்ரபர்ணிநதி, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், வீற்றிருந்த திருக்கோலம், இந்திரனுக்கும் வாயுவுக்கும் வருணனுக்கும் ப்ரத்யக்ஷம், நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இங்கு இரண்டு திருப்பதிகள் இருப்பதனாலே இது இரட்டைத்திருப்பதி எனப்படும். இது ஆழ்வார் திருநகரி ஸ்டேஷனிலிருந்து கிழக்கில் ஆற்றின் வடகரையில் 2-மைலிலிருக்கிறது. இதற்கு மேற்கில் அப்பன் சந்நிதியென்று ஆழ்வார் அவதரித்த ஸ்தலமிருக்கிறது. ஆகாராதிகளுக்கு கையில் சாமான்களிருக்கவேண்டும். இங்கிருந்து வடகிழக்கில் 5-மைலில் (56) திருக்குளந்தையிருக்கிறது.

51 - சிரீவரமங்கை (வானமாமலை) (நாங்குநேரி)

ப்ரபாவம்-வானமாமலைப்பெருமாள், தெய்வநாயகன், தோதாத்ரிப்பெருமாள், சிரீவரமங்கை நாச்சியார். நந்தவர்த்தன விமானம், இந்திரபுஷ்கரணி, சேற்றுத்தாமரை, கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, சேனை முதலியார் பெரியதிருவடி, இவர்களுடனும், சாமரகன்னிகைகள் சந்திரர், சூரியர் பக்கத்திருக்க இந்திரனுக்கும், ப்ரம்மாவுக்கும் உரோமகரிஷிக்கும், ப்ருகுரிஷிக்கும், மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

இங்கு என்ணெய்கிணறு ஒன்றிருக்கிறது. இந்த எண்ணெயை சகலரோக நிவாரணி என்று விசேஷமாக யாத்திரை வாசிகள் கொண்டுபோகுறார்கள்.

மார்க்கமும் வசதிகளும்-இது திருநெல்வேலியிலிருந்து தெற்கே கற்சாலை மார்க்கமாய் 20-மைலிலிருக்கிறது. இங்குச் சத்திரமுண்டு- வானமாமலை மடத்தில் எல்லோருக்கும் ப்ரசாதம் கிடைக்கும். வண்டிகளும் மோட்டார்வண்டிகளும் உண்டு.

52 - திருப்புளிங்குடி.

ப்ரபாவம்—காய்சினவேந்தன், மலர்மகள் நாச்சியார், வேதசார விமானம், வருணதீர்த்தம், நிருதிதீர்த்தம், கிழக்கே திருமுகமண்

டவம் புஜங்கசயம், நிருதிக்கும், வருணனுக்கும், தர்மராசாவுக்கும், ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது (56) வாகுணமங்கைக்கு கிழக்கே 1-மைலிலும் ஸ்ரீவைகுண்டம் ஸ்டேஷனிலிறங்கினால் 2-மைலிலுமிருக்கின்றது. ஆகாராதிகளுக்கு ஸ்ரீவைகுண்டம் வரவேணும்.

53 - திருப்பேரை. 10-8-59 5-9-65

ப்ரபாவம்—மகரநெடுங்குழைக்காதன், நிகரில் முகில்வண்ணன புளிங்குடிவல்லி நாச்சியார், பத்திரவிமாகம், சுக்கிரபுஷ்கரணிர் கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், சுக்கிரனுக்கும், பிரமனுக்கும், ஈசாங்யருத்ரனுக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வா, மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது ஆழ்வார் திருநகரி ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கே கற்சாலை மார்க்கத்தில் 3-மைலிலும் இரட்டைத் திருப்பதியிலிருந்து தெற்கே 1-மைலிலும் இருக்கிறது. இங்கிருந்து 2-மைலில் (56) திருக்குளந்தை இருக்கிறது. ஆகாராதிகளுக்கு வசதியுண்டு. பங்குனியில் உத்திரம் துஜாரோகணம்.

54 - ஸ்ரீ வைகுந்தம். 10-8-59 6-9-65

ப்ரபாவம்—கள்ளப்பிரான், வைகுந்தநாதன், வைகுந்தவல்லி நாச்சியார், சந்திரவிமாகம், தாம்ரபர்ணிநதி, :பிருகுதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், இந்திரனுக்கும், பிருகுசக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது திருநெல்வேலி திருச்செந்தூர் பாதையில் 18-மைலிலுள்ள ஸ்ரீ வைகுண்டம் ஸ்டேஷனுக்கு வடக்கே ½-மைலில் தாம்ரபரணி வடகரையிலிருக்கிறது. இதற்கு கிழக்கே 3-மைலில் தாம்பிரபரணி

நதிக்குத் தென்கரையில் ஆழ்வார் திருநகரி இருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திரமும் ஹோட்டல்களு மிருக்கின்றன, இதற்கு கிழக்கே 1-மைலில் (55) வரகுணமங்கையும் (52) திருப்புளிங்குடியு மிருக்கின்றன.

பிரமோத்சவம்—சித்திரை மாதம் அசுவனியில் தீர்த்தம். இங்குநின்றுதான் அர்ச்சகர் திருப்புளிங்குடிக்கும் வரகுணமங்கைக்கும் போகவேணுமாகையால் அவரை பின் பற்றிச்சென்றால் இவ்விரு திருப்பதிகளையும் சேவிக்கலாம்.

✓ 55 - வரகுணமங்கை. 10-8-59 6-9-65

ப்ரபாவம்—விஜயாஸநர், வரகுணவல்லி நாச்சியார், விஜாகோடி விமாநம், தேவபுஷ்கரணி, அக்நிதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், அக்நிக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது ஸ்ரீ வைகுண்டத்திற்கு கிழக்கே கற்சாலை மார்க்கத்தில் 1-மைலிலிருக்கிறது. ஆசாரதிகளுக்கு ஸ்ரீ வைகுண்டம் வரவேணும். இங்கு சேவ காலமறிந்து சந்நிதிக்குச் செல்லவேடும் திருக்கதவங்களை மூடிவிட்டால் மறுபடியும் திறக்கமாட்டார்கள். மறுகாலை சந்நிதிக்குத்தான்.

✓ 56 - திருக்குளந்தை (பெருங்குளம்) 10-8-59 6-9-65

ப்ரபாவம்—மாயக்கூத்தன், குளந்தைவல்லிநாச்சியார், ஆநந்த நிலயவிமாநம், பெருங்குள தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம். ப்ருஹஸ்பதிக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது ஸ்ரீ வைகுண்டம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கில் கற்சாலைமார்க்கமாய் 7-மைலிலிருக்கிறது. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். திருப்புளிங்குடியி

லிருந்து 4-மைல். வண்டிகளுண்டு. பங்குனிமாதம் திருவோணத்தில் துஜாரோஹணம்.

## 57 - திருக்குறுங்குடி.

ப்ரபாவம்—வைஷ்ணவநம்பி, மலைமேல்நம்பி, நின்றநம்பி, இருந்தநம்பி, கிடந்தநம்பி, திருப்பாற்கடல்நம்பி, குறுங்குடிவல்லி நாச்சியார், பஞ்சகேதகவிமானம், திருப்பாற்கடல்நதி, பஞ்சதுறை, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், பக்கம் நின்றசிவனுக்கு ப்ரத்யக்ஷம். திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

இத்தலத்தில்தான் நம்பாடுவான் நம்பியை கௌசிகமென்னும் கானத்தால்பாடி முக்திபடைந்தது. நாளைக்கும் கார்த்திகை பூர்வபக்ஷ த்வாதசியில் இந்த ஐதிஹ்யம் நடந்துவருகிறது.

மார்க்கமும் வசதிகளும்—இது திருநெல்வேலிக்கு தெற்கே 20-மைலிலுள்ள நாங்குநேரி (வானமாமலை)க்குத் தென்மேற்கில் கற்சாலைமார்க்கமாய் 8-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு சத்திரமிருக்கிறது. ஜீயர்மடத்தில் சர்வத்ராளுக்கும்பிரசாதம் கிடைக்கும். திருநெல்வேலிக்கு 10-மைல் மேற்கிலுள்ள சேர்மாதேவி ஸ்டேஷனிலிறங்கி தெற்கே களக்காடு மார்க்கமாய் 18-மைல் தூரம்சென்றாலும் இத்தலத்தை அடையலாம். மாட்டுவண்டிகளுண்டு.

குறிப்பு:—சித்திரைமாதம் உத்திர நக்ஷத்திரம் துஜாரோஹணம். நின்றநம்பி கிடந்தநம்பி சந்நிதிகளுக்கு மத்தியில் சிவன் கோயிலிருக்கிறது. பெருமாள் உள்ப்ரதக்ஷணம் வரும்போது சிவன்கோயில் எதிரில் வந்துநின்று "நம்பக்கம் நின்ற சிவனுக்கு ஓரொன்றால் குறையுண்டோ! என்ன, சிவபெருமானும் ஓரொன்றால் குறையில்லை." என்று விடைதந்த பிறகு எழுந்தருளி திருவீதி உத்சவம் கண்டருள்வர்.

இங்கு நின்று மேற்கே 6-மைலில் மலைமேல் நம்பி சந்நிதியிருக்கிறது. துணையோடல்லது போகலாகாது. பிரதி சனிக்கிழமைகளிலும் ஜனங்கள் விசேஷமாய் போகுருர்கள். இந்தமலையில் புலிகளும் கரடிகளும் கடுவாய்களும் விசேஷ முண்டு. இச்சந்நிதியை பூதத்தார் வைரவர் என்னும் இரண்டு க்ஷுத்ர தேவதைகள் காவல் புரிகின்றனர்.

✓5-9-65 58 - திருக்கோளூர். 10 - 8 - 59

ப்ரபாவம்—வைத்தமாநிதி. (நிக்ஷேபவித்தன்) கோளூர்வல்லி நாச்சியார், ஸ்ரீகரவிமாநம், குபேரதீர்த்தம்,தாம்பரபர்ணிநதி, கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம். குபேரனுக்கும், மதுரகவி யாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம். மதுரகவியாழ்வார் அவதரித்த தலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது ஆழ்வார் திருநகரி ஸ்டேஷனிலிருந்து ஒரு மைலிலும் திருப்பேரையிலிருந்து மேற்கே 2-மைலிலும்,திருநகரிக்கு கிழக்கே 2-மைலிலுமிருக்கிறது. ஆழ்வார் திருநகரியிலுள்ள நவதிருப்பதிகள். 1-திருக்குருகூர் 2-3-தொலைவில்லி மங்கலம், (இரண்டு திருப்பதிகள்) 4-திருப்புளிங்குடி 5- திருப்பேரை 6 ஸ்ரீவைகுந்தம், 7-வரகுணமங்கை, 8-திருக்குளந்தை, 9-திருக்கோளூர். ஆழ்வார் திருநகரிலாவது ஸ்ரீவைகுந்தத்திலாவது ரூபாய் 3-க்கு ஒரு மாட்டுவண்டி அமர்த்திக்கொண்டால் இந்த நவதிருப்பதிகளையும் சுலபமாய் ஒரேநாளில் சேவிக்கலாம். ஆவணி புநர்வசுவில் தீர்த்தம்.

பாண்டியநாட்டுத் திருப்பதிகள் முற்றுப்பெற்றன.

---

எம். வெங்கட்ராமய்யர்
பட்டர், திருக்கோவிலூர்

## மலைநாட்டுத் திருப்பதிகள் கக.

3.4.65. 59 - திருவநந்தபுரம். (அநந்தசயநம்)

ப்ரபாவம்—அநந்தபத்மநாபன், ஸ்ரீ ஹரிலக்ஷ்மிநாச்சியார். ஹேம கூடவிமாநம், பத்மதீர்த்தம், மத்ஸ்யதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், ருத்ரனுக்கும் சந்திரனுக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது திருவநந்தபுரம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 2-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. திருநெல்வேலி பாலத்திலிருந்து தெற்கே 20-மைலிலுள்ள நாங்குநேரி, 28-மைலிலுள்ள திருக்குறுங்குடி, 37-மைலிலுள்ள பனைக்குடி 52-மைலிலுள்ள நாகர்கோவில், 62-மைலிலுள்ள தக்கலை, 70-மைலிலுள்ள மார்த்தாண்டம், குளித்துறை மார்க்கமாய் சென்றால் 94-மைலிலுள்ள திருவநந்தபுரத்தையடையலாம். நாகர்கோவிலிலிருந்து (60) திருவண்பரிசாரத்துக்கும் தக்கலை அல்லது மார்த்தாண்டத்திலிருந்து (68) திருவாட்டாறுக்கும் வழிகள் பிரிகின்றன. கற்சாலை மார்க்கத்திற்கு வண்டிகளும் மோட்டார் வண்டிகளும் உண்டு. சத்திரங்கள் ஆங்காங்கு பலவுண்டு. ஹோட்டல்களும் காபிகிளப்புகளும் உண்டு.

ஐப்பசியில் திருவோணம் இறுதியாகக்கொண்டு 10-நாளும் பங்குனியில் ஹஸ்தம் முதற்கொண்டு 10-நாளும் ஆக இரண்டு ப்ரம்மோத்சவங்கள் நடைபெறுகின்றன. அனந்த சயனனுக்கு திருமுடிஸ்தானமாகிய திருவல்லம் என்னும் திவ்விய தேசம் தெற்கே 4-மைலிலிருக்கிறது. திருவடிஸ்தானமாகிய திருப்பாதபூர் வடக்கே 8-மைலிலும் மார்க்கத்தில் 6-வது மைலில் பிரபல சுப்ரமண்ய ஸ்வாமி கோயிலும் இருக்கின்றன.

திருநெல்வேலியிலிருந்து கொல்லத்திற்குச் செல்லும் ரெயில் மார்க்கத்தில் ஆரியன்காவுக்கும் தென் மலைக்கும் இடையில் 8-மைல் தூரம் மலைகளினாலும் பெரிய காடுகளினாலும் அடைக்கப்பட்டுள்ளது. இதில் தென் இந்தியா ரெயில்வே கம்பெனியார் மூன்று சிறுகுன்றுகளைத் துளைத்துத் தூப்புகள் செய்தும் சிலகணவாய்களுக்கும் சில அருவிகளுக்கும் சில சிற்றாறுகளுக்கும் பாலங்கள் கட்டியுமிருக்கிறார்கள். இந்த தூப்புகளில் பெரியது 2924 அடி நீளமுள்ளது. இந்த மார்க்கத்தில் உயர்ந்தமரங்களையும் அடர்ந்தகாடுகளையும் அகாத பள்ளத்தாக்குகளையும் குறுகிய கணவாய்களையும் பலவித வர்ணங்களையுடைய விவித புஷ்ப ஜாலங்களையும் நீண்டும் சுருண்டும் பசுமையாயுமிருக்கின்ற பலவித லதாங்கிகளையும் சத்தமிட்டு ஓடிவரும் அருவிகளையும், மலைமிசை புகைவண்டி சுற்றி சுற்றி வருவதையும் இருபக்கங்களிலும் வானோங்கி-வளர்ந்திருக்கும் பாக்கு மரங்களையும் தேக்குமரங்களையும் பார்த்தால் கண்ணுக்கு பெரிய விழாவாயும் மனோகரமாயுமிருக்கும்.

கொல்லத்திற்கும் திருவநந்தபுரத்துக்கும் மத்தியிலிருக்கும் வர்க்கலைதோடு மார்க்கத்தில் 1887-ம் வருடத்தில் பதினேழு லக்ஷம் ரூபாய் செலவுசெய்து போக்கு வரவுக்கு சௌகரியமாய் மலையைக் குடைந்து இரண்டு தூப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஒன்று 998 அடி மற்றொன்று 2367 அடி நீளமுள்ளவை. இந்த தூப்புக்குள் படகுகளில் போகும்போது வெகு வியப்பாயிருக்கும்.

திருவநந்தபுரம் இந்த திருவாங்கூர் ராஜ்யத்திற்கு பிரதான பட்டணம். 57,882 ஜனத்தொகை யுள்ளது. மகாராஜாவசிக்குமிடம். மகாராஜா அவர்கள் வருஷத்திற்கு 8-லக்ஷம் ரூபாய் ப்ரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்கு கப்பம்

கட்டிவருகிறார். கோட்டையின் மத்தியில்தான் அநந்தபத்மநாபஸ்வாமி கோயிலிருக்கிறது. இங்குள்ள மகாராஜா அரண்மனை, இளையராஜா அரண்மனை, இராணி அரண்மனை, ஐகோர்ட்டுமுதலிய ஆபிஸ் கட்டடங்கள் மிருக காட்சிசாலை, சிங்காரவனம், சமுத்திரக்கரை முதலியன பார்க்கத்தக்கவைகள்.

மலைநாடு என்பது மேற்குத்தொடர்ச்சிமலைக்கும், மேற்கடலுக்கும் மத்தியிலுள்ள நாடு. இது இப்போது திருவாங்கூர் ராஜ்யத்தையும் கொச்சி ராஜ்யத்தையும் மலையாளத்தையும் உட்கொண்டிருக்கிறது. (கேரம் நாளிகேளம், தேங்காய், அளம்-உண்டாகுமிடம்) இந்நாட்டில் தென்னை அதிகமாயிருப்பதால் இதற்கு கேரளநாடு என்று பெயர். மலைக்கும் (ஆலம்-சமுத்திரம்) சமுத்திரத்திற்கும் மத்தியிலுள்ள நாடாகையால் அதற்கு மலையாளம் என்று பெயர். சேரநாடு என்பதுவும் இதுதான். வடக்குப் பழனிமலை, கிழக்குத் தென்காசி, மேற்கு கோழிக்கூடு, தெற்கு கடற்கரை இந்த எல்லைக்கிடையில் பதின்காதவழிகொண்டது சேரநாடு. இந்நாட்டில் 8800 அடி உயரமுள்ள யானைமலையும், 6200 அடி உயரமுள்ள அகஸ்திய மலையும் ஏலக்காய் மலையும் ப்ரதானமானவை.

தாம்பிரபரணி நதியும் பெரியாறும் இந்நாட்டில் பெரியவை. திருவாங்கூர் மலையில் யானைகள் அதிகம். அதன் தந்தமானது திருவாங்கூர் இராஜ்யத்து வரும்படிக்கு ஒரு பெரிய ஆதாரமாயிருக்கிறது இம்மலை நாட்டிலுள்ள காடுகள் வெகு விஸ்தாரமாயும் அதிக பலன் தரத்தக்கவைகளாயுமிருக்கின்றன. இந்நாட்டில் மழை எப்பொழுதும் தவறாமல் அதிகமாய் பெய்வதால் இந்நாட்டில் பஞ்சம் எப்போதும் உண்டானதில்லை என்பர். இந்நாட்டில் தென்னை, பாக்கு, பலா முதலிய மரங்கள் அபரிமிதமாய் இருப்பதால் இந்நாட்டிலுள்ளவர்களின் சம்பத்துகளுக்கும் இவை ஓர் ஆதாரமாய் இருக்கின்றன. மிளகு கொடிகளை பலாமரத்திலும் மற்ற மரங்களிலும் படரும்படி விட்டுவிடுகிறார்கள். மலையில் ஏலக்காய் ஏராளமாய் உண்டாகிறன காப்பிச்செடியும் பயிராக்குகிறார்கள். இந்நாட்டில் $\frac{3}{4}$ பாகம் ஜனங்கள்

இந்துக்கள் மற்ற ஜனங்கள் மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் சென்னை ராஜதானியில் மற்ற எல்லா பாகங்களையும்விட இங்குள்ள கிறிஸ்தவர்களின் தொகை அதிகம்.

மலையாளிகள் நடை உடைபாவனைகளில் மற்ற இந்துக்களுக்கு பலவகையில் வேறுபட்டிருக்கிறார்கள். நம்பூரிமார்களில் மூத்த குமாரன் மாத்திரம் கலியாணம் செய்துகொள்ளவும் குடும்ப சொத்தை அடையவும் கூடும். மற்ற குமாரர்களுக்கு இவ்விதமான பாத்யதை இல்லை. மற்ற பிராம்மணர்களுகடைய வழக்கத்திற்கு நேர் விரோதமாக இவர்கள் பெண்களில் சிலர் வெகு பிராயம் வரையிலும், சிலர் ஆயுள் நாள் முழுவதும் விவாகம் செய்துகொள்ளாமல் இருந்து விடுகிறார்கள். நாயர்மாரில் ஸ்திரீகளுக்கு விசேஷ கௌரவமுண்டு. இந்நாட்டில் ஒருவன் சொத்துக்கு சுதந்திரவாளில் அவன் சொந்த பிள்ளைகளல்ல. அவனுடைய சகோதரியின் பிள்ளைகளே அவனுக்கு உத்தரகிரியைச்செய்து அவன் சொத்தை அடையும் பாத்தியமுள்ளவர்கள். மற்றவிடங்களில் உள்ள இந்துக்கள் தலைக்கு பின்புறம் குடுமி வைத்திருக்க இந்நாட்டிலுள்ளவர்கள் தலையின் உச்சியில் குடுமிவைதது அதை நெற்றியில் தொங்கும்படி விடுகிறார்கள். இந்நாட்டில் வழங்கும் பாஷை மலையாளம்.

அநந்தசயனம் முதலான 13 திருப்பதிகள் இந்த மலைநாட்டிலேயே இருக்கின்றன. இந்நாட்டிலுள்ள கோயில்கள் எல்லாம் போத்திமார்களால் பூஜிக்கப்பட்டு வருகின்றன. போத்திமார்கள் சீலமுடையவர்களானலும் அவர்களுடைய அநுசாரம் நமக்குப்பிடிக்கிறதில்லை. நமது ஆசாரம் அவர்களுக்குப் பிடிக்கிறதில்லை. பார்ப்பனர்களுக்குத்தவிர மற்றயோர்களுக்கு தீர்த்தம், துளஸீ, பிரசாதம் இவைகள் கொடுப்பதில்லை. பெரும்பாலும் அநேக சந்நிதிகளில் சடாரி (ஸ்ரீ சடகோபன்) வழங்குவதில்லை. பெருமாள் சமீபத்திலும் ஜனங்களை விடுவதில்லை. ஆயினும் பெருமாள் சந்நிதி உன்னதமாக கட்டப்பட்டிருப்பதால் தூரத்திலிருந்து சேவிப்போர்களுக்கும் நன்றாய் சேவையாகும். இந்நாட்டில் சில சந்நிதிகளில் மூலவமூர்த்திகளுக்கு வடகலை தென்கலை ஆகாரமில்லாத ஓர்விதமான திருமண்காப்புகளும், கோபி ஊர்த்வ புரண்டரமும், சந்தனத்தினல்

பொட்டும் வைக்கப்வைக்கப்பட்டிருக்கின்றன. இந்நாட்டில் சைவ, வைணவ பேதங்கள் பாராட்டுவதில்லை. பார்ப்பனர்களுக்கு அதிக மரியாதையுண்டு.

### ✓ 60 - திருவண்பரிசாரம். (திருப்பதிசாரம்) 9-8-5

ப்ரபாவம்—திருவாழ்மார்பன், வேங்கடாசலபதி, கமல்வல்லி நாச்சியார், இந்திர கல்யாண விமாநம், லட்சுமிதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்ததிருக்கோலம், விந்தைக்கும் காரிக்கும் உடையநங்கைக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம். இங்கு நம்மாழ்வார் சந்நிதி ப்ரத்யேகமாயிருக்கிறது. நடராஜ விக்ரகமும் இருக்கிறது. சித்திரையில் திருவோணம் தீர்த்தம்.

மார்க்கமும் வசதிகளும்-இது (57) திருக்குறுங்குடிக்கு தெற்கில் 9-மைலிலுள்ள பணக்குடியை அடைந்துபின்னும் தென்மேற்கே 14-மைல்சென்று (நாகர்கோவிலுக்கு சமீபமாய்) வடக்கே திரும்பி ½-மைல்தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். (திருக்குறுங்குடி மார்க்கத்தைப் பார்க்க) (68) திருவாட்டாறுக்கு தெற்கில் 8-மைலிலுள்ள தக்கலை (or பத்மநாதபுரம்)பிலிருந்து தென்கிழக்கே 10-மைலிலிருக்கும் நாகர்கோயிலை அடைந்து வடகிழக்காய் 2-மைல் தூரம் சென்றாலும் இத்தலத்தையடையலாம். (திருவாட்டாறு மார்க்கத்தைப்பார்க்கவும்) வண்டிகள் அகப்படும். சத்திரமும் பிராமணர்களுக்கு ஊட்டுப்பிறையுமுண்டு. இத்தலத்திற்கு தெற்கில் 12-மைலில் குமரிக்ஷேத்திரமாகிய கன்னியாகுமரி இருக்கிறது; இது தென்சமுத்திரம் ஸ்நாந விசேஷம்.

### ✓ 61 - திருக்காட்கரை. 25-7-58

ப்ரபாவம்—அப்பன், பெருஞ்செல்வநாயகி, புஷ்கலவிமாநம், கபிலதீர்த்தம், ~~தெற்கே~~ திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், கபில முனிக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம். 5.4.64

மார்க்கமும் வசதிகளும்-இது ஷோரனூர் எரணாகுளம் மார்க்கத்திலுள்ள இடைப்பள்ளி ஸ்டேஷனுக்கு கிழக்கே கற்சாலைமார்க்கமாய் 2-மைலிலிருக்கிறது. சத்திரமுண்டு. வண்டிகளுண்டு. இதற்கு தென் கிழக்கே 8-மைலில் (69) வித்துவக்கோடு இருக்கிறது.

25-7-58 62 - திருமூழிக்களம். ✓

5. 4. 65. ப்ரபாவம்—திருமூழிக்களத்தான், மதுரவேணி நாச்சியார், ஸௌந்தர்யவிமானம், பெருங்குள தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், ஹரீதமகாமுனிக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்.இது ஷோரனூர் எரணாகுளம் மார்க்கத்திலுள்ள அங்கமாலி ஸ்டேஷனிலிருந்து கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 4-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திரமும் பிராமணர்களுக்கு ஊட்டுப்புரையுமிருக்கின்றன.

28-7-58 63 - குட்டநாடு, திருப்புலியூர். (புலியூர்) ✓

4. 4. 65. ப்ரபாவம்—மாயப்பிரான், பொற்கொடிநாச்சியார், புருஷோத்தம விமானம், பூஞ்சுனைதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ஸப்தரிஷிகளுக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது செங்கன்னூரிலிருந்து கற்சாலை மார்க்கமாய் மேற்கே 3-மைலிலிருக்கிறது. சத்திரம் இருக்கின்றது. (64) திருச்செங்குன்றூர் மார்க்கத்தைப் பார்க்கவும்.

6-7-58 64 - திருச்செங்குன்றூர். (செங்கன்னூர்) ✓

4. 4. 65 ப்ரபாவம்—இமையவரப்பன், செங்கமலவல்லி நாச்சியார், ஜகஜ்யோதி விமானம், திருச்சிற்றாறு, சங்கதீர்த்தம, மேற்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், பத்மாஸுரன் நிமித்தமாக சிவனுக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-கொல்லத்திலிருந்து வடக்கே கெனல் மார்க்கமாய் 40-மைலிலுள்ள அம்பலப்புழையை அடைந்து கிழக்கே திரும்பி 18-மைல் தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். இதைச்செங்கனூர் வடக்கு என்பர். சத்திரமுண்டு வண்டிகள் கிடைக்கும். செங்கன்னூருக்கு கிழக்கில் 3-மைலில் (71) திருவாறன்விளையும் தென்மேற்கே 4-மைலில் (68) திருப்புலியூரும், வடமேற்கே 5-மைலில் (67) திருவண்வண்டூரும், வடமேற்கே 10-மைலில் (66) திருவல்லவாழும், 14-மைலில் (70) திருக்கடித்தானமும் இருக்கின்றன.

✓ 65 - திருநாவாய். 22-7-58
6.4.65

ப்ரபாவம்—நாராயணன், மலர்மங்கை நாச்சியார், வேதவிமானம் செங்கமலஸரஸ்ஸு ~~தெற்கே~~ திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், லட்சுமிக்கும் கஜேந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது மதராஸ் கள்ளிக்கோட்டை மார்க்கத்தில் 382-மைலிலுள்ள எடக்குளம் ஸ்டேஷனுக்கு தெற்கே 1-மைலில் ஆற்றங்கரைமேலிருக்கிறது. சத்திரமுண்டு. (திருவநந்தபுரத்திற்கு வடக்கே 22-மைலிலுள்ள ஜனார்த்தனத்திற்குகிழக்கே 7-மைலிலுள்ள நாவாய்குளத்தை திருநாவாய் திவ்யதேசமென்று சொல்லுவர் சிலர். அதுவன்று. அங்கும் பிரபலமுள்ள சங்கரநாராயணர் சந்நிதி ஒன்று இருக்கிறது.)

✓ 66 - திருவல்லவாழ். (திருவல்லாய்) 27-7-58
4.4.65

ப்ரபாவம்—கோலப்பிரான், செல்வத்திருக்கொழுந்து நாச்சியார், சதுரங்ககோலவிமானம், கண்டாகர்ணதீர்த்தம், மணிமலையாறு. பம்பாநதி, கிழக்கே திருமுகமண்டலம்,நின்றதிருக்கோலம், கண்டா

கர்ணனுக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது திருவமுண்டூரிலிருந்து வடக்கே 4-மைலிலிருக்கிறது. (67) திருவண் வண்டூர் மார்க்கத்தைப் பார்க்கவும். வண்டிகளுண்டு சத்திரமுண்டு.

குறிப்பு:—பம்பாநதி (இருந்நி) கிழக்கு மலைத்தொடரில் உற்பத்தியாகி கல்லாறு காட்டாறு வலியாறு என்னும் நீரோட்டங்கள் இருந்நி என்ற இடத்தில் ஒன்று சேர்ந்து பம்பா நதியாகி செங்கனூர் திருவல்லாய் தாலூக்காக்களின் வழியாயோடி கடைசியில் பல கிளைகளாய் பிரிந்து வேப்பநாட்டுக்காயலில் விழுகிறது. திருவாங்கூர் சமஸ்தானத்தில் இது ஒரு நேர்த்தியான நதி. இந்த நதிக்கரையின் மேலுள்ள ஸ்தலங்கள் திருவாறன்விளை, திருச்செங்கன்னூர், திருவல்லவாய், திருவண்வண்டூர்.

8-7-58 67 - திருவண்வண்டூர். (திருவமுண்டூர்) ✓
4. 4. 65

ப்ரபாவம்—பாம்பணையப்பன், கமலவல்லி நாச்சியார், வேதாலயவிமாநம், பாபநாசதீர்த்தம், கல்லாறு, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், மார்க்கண்டேயருக்கும் நாரதருக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது (63) திருப்புலியூரிலிருந்து வடக்கே 3-மைலிலும், (64) செங்கனூரிலிருந்து மேற்கே 5-மைலிலும், (66) திருவல்லாயிலிருந்து தெற்கே 5-மைலிலும் இருக்கிறது.-அம்பலப்புழையிலிருந்து கிழக்கே கால்வாய் மார்க்கமாய் 16-மைலில் இருக்கிறது.

~~[illegible]~~ ✓ 2. 4. 65. 68 - திருவாட்டாறு. 9-8-69

ப்ரபாவம்—ஆதிகேசவப்பெருமாள், மரகதவல்லி நாச்சியார், அஷ்டாங்கவிமாநம், கடல்வாய் தீர்த்தம், ராமதீர்த்தம், மேற்கே திரு

முகமண்டலம், புஜங்கசயநம். பரசுராமனுக்கும் சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம், நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—(60) திருவண்பரிசாரத்திலிருந்து தென்மேற்கே 2-மைலிலிருக்கும் நாகர்கோயிலை அடைந்து பின்னும் வடமேற்கே கற்சாலைமார்க்கமாய் 10-மைலினுள்ள தக்கலையை அடைந்து வடக்கே திரும்பி 6-மைல் தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். திருவநந்தபுரத்திலிருந்து தென்கிழக்காய் கற்சாலைமார்க்கத்தில் 24-மைலிலுள்ள மார்த்தாண்டத்தை அடைந்து வடக்கே திரும்பி 4-மைல் தூரம்சென்றால் இத்தலத்தையடையலாம். வண்டிகள் உண்டு. திருவநந்தபுரத்திலிருந்தும் நாகர்கோயிலிலிருந்தும் மோட்டார் வண்டிகளுண்டு. சத்திரங்கள் இருக்கின்றன.

✓ 69 - வித்துவக்கோடு. 11-3-59
6.4.65. 2.1.65.

ப்ரபாவம்-உய்யவந்தபெருமாள், வித்துவக்கோட்டுவல்லி, தத்வகாஞ்சனவிமாநம், சக்கரதீர்த்தம், தெற்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், அம்பரீஷனுக்கு; ப்ரத்யக்ஷம். குலசேகராழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—ஷோரனூர் எர்ணாகுளம் பாதையிலுள்ள இடப்பள்ளி ஸ்டேஷனுக்கு கிழக்கில் 2-மைலிலுள்ள (61) திருகாட்கரையை அடைந்து பின்னும் தென்கிழக்கே கற்சாலைமார்க்கமாய் 6-மைல் தூரம்சென்றால் இத்தலத்தையடையலாம். எர்ணாகுளம் ஸ்டேஷனுக்கு,தென்கிழக்கே 7-மைலிலுள்ள திருப்பூந்துரையை அடைந்து கிழக்கே கற்சாலைமார்க்கமாய் 8-மைல் தூரம்சென்றால் இத்தலத்தை அடையலாம். வண்டிகளுண்டு. சத்திரமிருக்கிறது.

27-7-58 4.4.65

### 70 - திருச்கடித்தானம்.

ப்ரபாவம்—அற்புதநாராயணன், கற்பகவல்லித்தாயார், புண்ணியகோடிவிமானம், பூமிதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம் ருக்மாங்கதமஹாராசனுக்கு ப்ரத்யக்ஷம், நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது (66) திருவல்லவாழுக்கு வடக்கே கற்சாலைமார்க்கமாய் 3-மைலில் இருக்கிறது. திருவல்லவாழ் மார்க்கத்தைப்பார்க்கவும், சத்திரமிருக்கிறது.

27-7-58 4.4.65

### 71 - திருவாறன்விளை. (ஆறன்முளை)

ப்ரபாவம்—திருக்குறளப்பன், பத்மாஸநி நாச்சியார். வாமந விமானம், வேதவ்யாஸஸரஸ்ஸு, பம்பாநதி, வடக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம், ப்ரஹ்மாவுக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வா மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது (64) திருச்செங்குன்றூருக்கு கிழக்கே கெனல் மார்க்கமாய் 4-மைலிலிருக்கிறது.

மலைநாட்டுத்திருப்பதிகள் முற்றுப்பெற்றன.

---

## நடுநாட்டுத் திருப்பதிகள். உ

3-12-65

### 72 - திருவயிந்திரபுரம். 5-7-57

ப்ரபாவம்—தெய்வநாயகப்பெருமாள், வைகுண்டநாயகி, சந்திர விமானம், கெருடநதி, ஸேஷதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம் நின்ற திருக்கோலம், சந்திரனுக்கும், கெருடனுக்கும் ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது (Cuddalur. O. T-) திருப்பாப்புலியூர் ஸ்டேஷனுக்கு மேற்கில் கற்சாலைமார்க்க

மாய் 3-மைலிலிருக்கிறது. திருப்பாப்புலியூரில் 2-சத்திரங்களும் 6-ஹோட்டல்களுமிருக்கின்றன. வண்டிகளுமுண்டு.

### 73 - திருக்கோவலூர். 

5-12-65 6-12-57 25-12-58

ப்ராபாவம்—திருவிக்கிரமன், ஆயனர், பூங்கோவல் நாச்சியார், ஸ்ரீகரவிமாநம், க்ருஷ்ணதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், மிருகண்டு முனிவருக்கும் பலிசக்ரவர்த்திக்கும், ப்ரத்யக்ஷம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

குறிப்பு:—பெருமாள் ஸ்ரீ சடகோபனில் கலகல சப்தம் தோன்றுகிறது. பங்குனிமாதம் பௌர்ணமியில் இரதோற்ஸவம்.

**மார்க்கமும் வசதிகளும்**—இது திருக்கோவலூர் ஸ்டேஷனுக்கு தென்மேற்கே 2-மைலில் பெண்ணையாற்றின் தென்கரையிலிருக்கிறது. மழைகாலங்களில் ஆற்றைப் பரிசலால் கடக்கவேண்டும். மோட்டுவண்டிகளுண்டு 1-சத்திரமும், 4-ஹோட்டல்களுமிருக்கின்றன. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

நடுநாட்டுத்திருப்பதிகள் முற்றுப்பெற்றன.

---

## தொண்டைநாட்டுத் திருப்பதிகள். உஉ

[மேற்கில் பவளமலையினையும், கிழக்குக் கடலையும், தெற்கு பிணுகினி நதியையும் வடக்கு திருவேங்கடத்தையும் எல்லையாக கொண்டநாடு-தொண்டைநாடு.]

### 74 - அத்திகிரி-காஞ்சீபுரம். 

11-9-57 23.1.66

ப்ராபாவம்-வரதராஜப்பெருமாள், பெருந்தேவித்தாயார், அத்திகிரி, புண்ணியகோடிவிமாநம், ஸத்யவ்ரதக்ஷேத்ரம், அநந்தஸரஸ்ஸு,

சேஷதீர்த்தம், வராஹதீர்த்தம். ப்ரஹ்மதீர்த்தம், பத்மதீர்த்தம், அக்நிதீர்த்தம், குசலதீர்த்தம், வேகவதிநதி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பிருகுமகரிஷிக்கும் நாரதருக்கும் திருவநந்தாழ்வானுக்கும், கஜேந்த்ராழ்வானுக்கும், ப்ரஹ்மாவுக்கும் ப்ரத்யக்ஷம்.

வாரணகிரி-அழகிய சிங்கப்பெருமாள், அரித்ராதேவித் தாயார், குஹவிமானம், மேற்கே திருமுகமண்டலம் வீற்றிருந்த திருக்கோலம், ப்ருஹஸ்பதிக்கு ப்ரத்யக்ஷம், பூதத்தாழ்வார் மங்களாசாஸநம். வைகாசிமாசம் திருவோண நக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்ஸவம். மூன்றாவதுநாள் காலை கருடசேவை உலகப்ரஸித்தம்.

மார்க்கமும் வசதிகளும்—இது காஞ்சீபுரம் ஸ்டேஷனுக்கு தெற்கே 2-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. 10-சத்திரங்களும் 6 ஹோட்டல்களுமிருக்கின்றன.

இக்காஞ்சீபுரம் விஷ்ணுகாஞ்சி, அல்லது சின்னகாஞ்சிபுரம் என்றும், சிவகாஞ்சி அல்லது பெரியகாஞ்சீபுரம் என்றும் இரண்டு பிரிவுள்ள ஒரு பெரிய முனிசிபல் பட்டணம் 53864 ஜனத்தொகை யடைங்கியது.
சின்னகாஞ்சிபுரத்தில் (74) அத்திகிரி, (82) திருவெஃகா (75) அஷ்டபுஜம் (76) திருத்தண்கா (77) வேளுக்கை என்னும் ஐந்து திருப்பதிகளும்; பெரியகாஞ்சிபுரத்தில் (81) ஊரகம், (79) நீரகம், (83) காரகம், (84) கார்வானம், (85) கள்வனூர், (78) பாடகம், (80) நிலாத்திங்கள் துண்டம், என்னும் ஒன்பது திருப்பதிகளும் இருக்கின்றன. இதற்கு மேற்கில் 7-மைலில் (88) திருப்புட்குழி இருக்கின்றது. பெரியகாஞ்சிபுரம், ஸ்டேஷனுக்கு மேற்கே 1-மைலில் இருக்கிறது. இங்கு 18 விஷ்ணுவாலயங்களும், 23 தீர்த்தங்களும், 7-நதிகளும் முன்பு இருந்ததாக சொல்லுகிறார்கள்.

இங்கு ஏகாம்பரேச்சுரர்கோயில் காமாக்ஷி அம்மன், கோயில், குமரகோட்டம் கச்சியேகம்பம், கச்சி மேற்றளி, கச்சி அனேக தங்காபதம், கச்சிநெறிக்காரைக்காடு, ஒணகாந்தன்தளி, குரங்கணி முட்டம் முதலான சிவஸ்தலங்களிருக்கின்றன. வேகவதியின் தென்கரையில் சமணர் கோயில் ஒன்றிருக்கிறது. இவைகளெல்லாம் பார்க்கத்தக்கவைகள்.

### ✓ 75 - அட்டபுயகரம் (அஷ்டபுஜம்.) 11-9-57 23.1.66

ப்ரபாவம்—ஆதிகேசவப்பெருமாள், சக்ராதார், அலர்மேல் மங்கை நாச்சியார், ககநாக்ருதிவிமாநம், கஜேந்த்ரபுஷ்கரணி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், கஜேந்த்ராழ்வானுக்கு ப்ரத்யக்ஷம், பேயாழ்வார் திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது சின்னகாஞ்சீபுரத்திலுள்ள மூன்றாவது திருப்பதி. தேவப்பெருமாள் சந்நிதிக்கு மேற்கே ½-மைலிலிருக்கிறது. (82) திருவெஃகாவுக்கு தெற்கே ரோட்டுக்கு இடபுறத்திலிருக்கிறது.

### ✓ 76 - திருத்தண்கா (விளக்கொளிகோவில்) 11-9-57

ப்ரபாவம்—விளக்கொளிபெருமாள், தீபப்ரகாசர், திவ்யப்ரகாசர், மரகதவல்லித்தாயார், ஸ்ரீகரவிமாநம், ஸரஸ்வதிதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ஸரஸ்வதிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். வேதாந்ததேசிகர் அவதரித்த தலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது சின்னகாஞ்சீபுரத்திலுள்ள நாலாவது திருப்பதி. அஷ்டபுஜம் கோயிலுக்கு மேற்கே மட்சாலையில் ¼-மைலில் இருக்கிறது.

## 77 - வேளுக்கை. 11-9-57

ப்ரபாவம்—முகுந்தநாயகன், வேளுக்கைவல்லி நாச்சியார், கநக விமாநம், கநகஸரஸ்ஸு கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக் கோலம், பிருகுமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். பேயாழ்வார், திருமங்கை யாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது சின்னகாஞ்சியிலுள்ள 5-வது திருப்பதி. இது(76) விளக்கொளிகோயிலுக்குதெற்கே ½-மைலிலிருக்கிறது

குறிப்பு:—இந்தச்சந்நிதி வெள்ளத்தில் முழுகிப்போன தாக சொல்லுகிறார்கள். வேளுக்கபட்டரை என்னுமிடத் தில் ஒரு ஏரியின் மத்தியில் மூலவர் விக்ரகம் ஒன்றுமாத்தி ரம் இருக்கின்றது. இவ்விடத்திலேயே நரசிம்மன் ஸந்நிதி ஒன்று இருக்கிறது "மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை" என்னும திருமங்கைமன்னன் பாசுரத்தின்படி வேளுக்கை திவ்யதேசம் இதுவே என்று சொல்லுகிறார்கள். (இந் தச் சந்நிதி பிரபாவத்தை புராண ஸ்தலங்களில் காண்க)

## 78 - பாடகம். (பாண்டவதூதர் சந்நிதி)

2-9-57

ப்ரபாவம்—பாண்டவதூதர், ருக்மணிதேவி, ஸத்தியபாமை, பத்ரவிமாநம், மத்ஸ்யதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஜனமேஜயமகாராஜனுக்கும் ஹரீதமகாமுனிக்கும் ப்ரத்யக்ஷம், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சீபுரத்திலுள்ள 6-வது திருப்பதி. இது ஏகாம்பரேசுவரர் சந்நிதித் தெருவில் சற்று மேற்கே விலகியிருக்கிறது.

## 79 - நீரகம். 12-9-57

23.1.66

ப்ரபாவம்—ஜகதீசப்பெருமாள், நிலமங்கைவல்லி நாச்சியார், ஜகதீச்வரவிமாநம், அக்ரூரதீர்த்தம் கிழக்கேதிருமுகமண்டலம், நின்ற

திருக்கோலம், அக்ரூரமகாமுனிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சீபுரத்திலுள்ள 2-வது திருப்பதி. இந்த சந்நிதி லுப்தமாய் இப்போது உலகளந்தபெருமாள் சந்நிதியில் வடப்ராகாரத்தில் இருக்கிறது.

✓ 80-நிலாத்திங்கள் துண்டம். 11-9-57
23.1.66

ப்ரபாவம்—நிலாத்திங்கள் துண்டத்தான், (சந்திரசூடப்பெருமாள்) நேரொருவரில்லாவல்லி, புருஷஸூக்தவிமாநம், சந்திரபுஷ்கரணி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், சிவனுக்கும் பார்வதிக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சியிலுள்ள 7-வது சந்நிதி. இந்தச் சந்நிதி லுப்தமாய் ஏகாம்பரேசுவரர் ஆலயத்தில் முதற்பிராகாரத்திலிருக்கிறது.

✓ 81-ஊரகம் (உலகளந்தபெருமாள்கோயில்.) 11-9-57
23.1.66

ப்ரபாவம்—உலகளந்தபெருமாள், திருவிக்கிரமன், அமுதவல்லி நாச்சியார், ஸாரஸ்ரீகரவிமாநம், நாகதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், உரகமென்கிற ஆதிசேஷனுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சீபுரத்திலுள்ள முதலாவது சந்நிதி. காமாக்ஷியம்மன் கோயிலுக்கு மேற்புறத்திலிருக்கிறது. இச்சந்நிதியிலேயே (79) நீரகம் (83) காரகம் (84) கார்வாநம் சந்நிதிகள் இருக்கின்றன.

✓ 82 - திருவெஃகா (யதோத்காரி சந்நிதி) 11-9-57
23.1.66

ப்ரபாவம்—சொன்னவண்ணஞ்செய்தபெருமாள் (யதோத்காரி) கோமளவல்லி நாச்சியார், வேதசாரவிமாநம், பொய்கைபுஷ்கரணி, மேற்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், பொய்கையாழ்வாருக்கும்

கணிகண்ணருக்கும், ஸரஸ்வதிக்கும் ப்ரஹ்மாவுககும் ப்ரத்யக்ஷம், பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். பொய்கையாழ்வார் அவதரித்ததலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது சின்னகாஞ்சீபுரத்திலுள்ள 2-வது திருப்பதி. வரதராஜப்பெருமாள் சந்நிதிக்கு மேற்கே $\frac{3}{4}$-மைலில் ரோட்டுக்கு வடபுறத்திலிருக்கிறது. பங்குனி மாதத்தில் ரேவதி இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்ஸவம்.

✓ 83 - காரகம். 12-9-67 23.1.66

ப்ரபாவம்—கருணாகரப்பெருமாள், பத்மாமணிநாச்சியார், வாமநவிமாநம், அக்கிராயதீர்த்தம், தெற்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், கார்ஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சீபுரத்திலுள்ள மூன்றுவது திருப்பதி. இந்த ஸந்நிதி லுப்தமாய் உலகளந்தபெருமாள் கோயிலில் தாயார் சந்நிதிக்கு எதிரில் இருக்கின்றது.

✓ 84 - கார்வானம். 12-9-67 23.1.66

ப்ரபாவம்—கள்வர், கமலவல்லிநாச்சியார், புஷ்கலவிமாநம், கௌரிதடாகம், மேற்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், பார்வதிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சீபுரத்திலுள்ள நான்காவது திருப்பதி. இந்தச் சந்நிதிலுத்தமாய் உலகளந்தபெருமாள் கோயிலில் வைக்கப்பட்டிருக்கிறது. (இப்போது விளக்கொளி கோயிலுக்கு சமீபத்தில் ஒரு பஜனை கோயில்போல் கட்டப்பட்டு அங்கு விக்கிரகங்களை எழுந்தருளப்பண்ணி ஆராதித்து வருகிறார்கள்.)

## 85 - கள்வனூர். 11-9-57 23.1.66

ப்ரபாவம்—ஆதிவராஹப்பெருமாள், அஞ்சிலைவல்லிநாச்சியார் வாமநவிமாநம், நித்யபுஷ்கரணி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், அச்வத்தநாராயணனுக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கை யாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சீபுரத்தி லுள்ள ஐந்தாவது திருப்பதி. இந்த ஸந்நிதி லுத்தமாய்க் காமாக்ஷியம்மன்கோயிலிலிருக்கிறது. சைவாதநம். இக்கோ யில் குளத்தின் ஈசான்ய மூலையில் நின்றான், இருந்தான், கிடந்தான் என்கிற சந்நிதி ஒன்றும் இருக்கின்றது. இதைப் பார்க்க விரும்புவோர் இருட்டில் படிகட்டுகளின்மேல் ஏற வேண்டி இருப்பதால் பகலில் சாக்கிரதையாய்ப் போக வேண்டும்.

## 86 - பவளவண்ணம் (பவழவண்ணர் சந்நிதி) 11-9-57

ப்ரபாவம்—பவளவண்ணப்பெருமாள், பவளவல்லிநாச்சியார், ப்ரவாளவிமாநம், சக்கரதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், வீற்றி ருந்த திருக்கோலம், அசுவனி தேவதைகளுக்கும், பார்வதிக்கும் ப்ரத் யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரிய காஞ்சீபுரத்தி லுள்ள எட்டாவது திருப்பதி. ஏகாம்பரேசுவார் கோயிலு க்கு கிழக்கே ½-மைலிலும் காமாக்ஷியம்மன் கோயிலுக்கு வடக்கே ½-மைலிலும் இருக்கின்றது. இந்தச் சந்நிதிக்கு மேற்கில் பச்சைவண்ணர் சந்நிதியிருக்கின்றது.

## 87 - பரமேச்சுரவிண்ணகரம். 12-9-57
### (வைகுண்ட பெருமாள்கோயில்)

ப்ரபாவம்—பரமபதநாதன், வைகுந்தவல்லிநாச்சியார், முகுந்த விமாநம், அபிரம்மதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த

திருக்கோலம், பல்லவராயனுக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரியகாஞ்சிபுரத்தி லுள்ள ஒன்பதாவது திருப்பதி. இது காஞ்சிபுரம் ஸ்டேஷ னுக்கு சமீபத்தில் இருக்கிறது. இத்துடன் பெரியகாஞ்சி புரத்திலுள்ள ஒன்பது திருப்பதிகளும் முடிந்தன. கடைசி யான திருப்புட்குழி இதற்கு மேற்கே கற்சாலைமார்க்கமாய் 7-மைலிலிருக்கிறது. (மங்களாசாஸனமில்லாத மற்ற ஸ்தலங் கள் புராண ஸ்தலங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.)

இச்சந்நிதி விமாநம் இரண்டு அந்தஸ்துள்ளது. வை குண்டநாதன்சந்நிதிக்குமேல் அந்தஸ்ததில் சயநதிருக்கோல மாகவும் அதற்குமேல் அந்தஸ்தில் நின்ற திருக்கோலமாக வும்பெருமாள் எழுந்தருளி இருக்கின்றார். இந்தமாதிரி திருக் கூடலிலும் திருக்கோட்டியூரிலுமுண்டு. மேலேயும் தனித் தனி ப்ராகாரங்களுண்டு. இது அதிக புராதன ஸ்தலமாய் தோற்றுகிறது. சந்நிதியின் உள் ப்ராகாரச்சுவர்களில் அதிக அழகாய் புராதன சிற்பசாஸ்திரவிதிப்படி அனேக கல் வெட்டுப் பிரதிமைகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

6-2-58 88 - திருப்புட்குழி. 24.1.66

ப்ரபாவம்—விஜயராகவப்பெருமாள், மரகதவல்லி நாச்சியார், விஜயகோடி விமாநம், ஜடாயுதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம் வீற்றிருந்த திருக்கோலம், ஜடாயுவுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ் வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது பெரிய காஞ்சிபுரத் திற்குமேற்கே கற்சாலைமார்க்கமாய் 7-மைலிலிருக்கிறது. சத் திரமிருக்கிறது. ஹோட்டலில்லை சந்நிதியிலும் பிரசாதம்

கஷ்டம். மாசிமாதத்தில் புனர்வசு இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம்.

## 89 - திருநின்றவூர் (தின்னனூர்.) 20-4-56 22.1.66

ப்ரபாவம்—பக்தவத்ஸலர், பத்தராவிப்பெருமாள், என்னைப் பெற்றதாயார், ஸ்ரீநிவாஸவிமானம், வருணபுஷ்கரணி. வ்ருத்தக்ஷீரநதி கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், வருணனுக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். பங்குனி மாதத்தில் திருவோண நக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம் மூன்றாம்நாள் காலையில் கருடோத்சவம் விசேஷம்.

மார்க்கமும் வசதிகளும்-இது M.S. M.R. தின்னனூர் ஸ்டேஷனுக்கு தெற்கே கற்சாலைமார்க்கமாய் 1-மைலில் இருக்கிறது. சத்திரம் உண்டு. ஹோட்டல் கிடையாது. சந்நிதியில் ப்ராசாதம் கிடைக்கும்.

## 90 - திருவெவ்வுள். (திருவள்ளூர்) 22-4-56 26.1.66

ப்ரபாவம்—வீக்ஷாரண்யக்ஷேத்ரம, வீரராகவப்பெருமாள், கநகவல்லித்தாயார், விஜயகோடிவிமானம், ஹ்ருதாபநாசதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், ஈகாரண்யம். சாலிஹோத்ர முனிவருக்கு ப்ரத்யக்ஷம். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-இது M.S.M.R. திருவள்ளூர் ஸ்டேஷனுக்குவடக்கே கற்சாலை மார்க்கமாய் 2-மைலில் இருக்கிறது. 4-சத்திரங்களும், 3-ஹோட்டல்களுமுண்டு. டிராம் வண்டியும் ஜட்காவண்டிகளும் உண்டு. சித்திரையில் புனர்பூசம் முதற்கொண்டு 10-நாளும் தைமாதத்தில் பூராட்டாதி இறுதியாகக்கொண்டு 10-நாளும் ஆக இரண்டு பிரமோத்சவங்கள் நடைபெறுகின்றன. ப்ரதி அமாவாசைகளிலும் ப்ரார்த்தனையுள்ள ஜனங்கள் அபரிமிதமாய் வந்து கூடுகி

ளர்கள். இதனுல் கோயிலுக்கு நல்லவரும்படியுண்டு. வட கலே சந்நிதி. பாஞ்சராத்திர ஆராதநம்.

20-4-56 91 - திருநீர்மலே. 29. 1. 66

ப்ராபாவம்—காண்டாரண்ய க்ஷேத்திரம், நீர்வண்ணன், அணி மாமலர் மங்கைத்தாயார், புஷ்பகவிமாநம், சுவர்ண புஷ்கரணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், வால்மீகி மகரிஷிக்கு பிரத்யக்ஷம். இச்சந்நிதி மலே அடிவாரத்தில் உள்ளது.

ரங்கநாதன், ரங்கநாயகி, தோயகிரிவிமாநம் க்ஷீரபுஷ்கரணி, மேற்கே திருமுகமண்டலம், திருவனந்தாழ்வான்மேல் சயனம், சதுர்புஜம், ப்ருகு மார்க்கண்டேயருக்கு ப்ரத்யக்ஷம்.

சாந்த நரசிம்மர் த்விபுஜம் வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுகமண்டலம், காருண்ய புஷ்கரணி, சாந்தவிமாநம், ப்ரஹ்லாதாழ்வானுக்கு ப்ரத்யக்ஷம்.

உலகளந்தபெருமாள், ப்ரம்மாண்ட விமானம், சுத்தபுஷ்கரணி ருத்ரனுககுப் ப்ரத்யக்ஷம்.

சக்ரவர்த்தி திருமகன் சுவர்ணபுஷ்கரணி, புஷ்பகவிமானம். திருமங்கையாழ்வார் .பூதத்தாழ்வார் மங்களாசாஸநம். இச்சந்நிதிகள் மலேமேல் உள்ளவை.

சித்திரைமாதத்தில் திருவோணம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம் .5-வது நாள் இரவு, கருடசேவை.

மார்க்கமும் வசதிகளும்—இது S. I. R. பல்லாவரம் ஸ்டேஷனுக்கு மேற்கே கற்சாலேமார்க்கமாய் 3-மைலிலிருக்கிறது. 200-அடி உயரமுள்ள ஒருசிறிய குன்றுமிசை ரங்கநாதன் எழுந்தருளியிருக்கிறுர். கிராமம் சிறியது. வண்டிகளுண்டு. சத்திரமிருக்கிறது. ஹோட்டலில்லே. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். பல்லாவரத்தில் சத்திரமும் ஹோட்டலுமிருக்கின்றன.

## ✓ 92 - திருவிடவேந்தை. (திருவிடந்தை) 13-2-58 29.1.66

ப்ரபாவம்—நித்யகல்யாணர், கோமளவல்லி நாச்சியார், அகில்வல்லித்தாயார கல்யாணவிமாநம், கல்யாணதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், மார்க்கண்டேயருக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-S.I R. வண்டலூர் ஸ்டேஷனுக்குத் தென் கிழக்கே 16-மைலிலுள்ள கோவளத்தை அடைந்து தெற்கே திரும்பி கனல் மார்க்கமாய் 2-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். மஹாபலி புரத்திற்கு வடக்கே 6-மைலிலிருக்கிறது. வெகுசிறிய கிராமம் சத்திரமில்லை ஹோட்டலில்லை. சந்நிதியிலும் பிரசாதம் கஷ்டம். சித்திரை மாதம் திருவோணம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம். ஐந்தாநாளிரவு கருடசேவை.

## 93-திருக்கடல்மல்லை (மகாபலிபுரம்.) 13-2-58 29.1.66

ப்ரபாவம்—தலசயநத்துறைவார், நிலமங்கைநாச்சியார், ககநாக்ருதிவிமாநம், கருடநதி கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், புண்டரீகரிஷிக்கு ப்ரத்யக்ஷம், பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம் பூதத்தாழ்வார் அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்—செங்கற்பட்டு ஸ்டேஷனுக்கு தென் கிழக்கே 9-மைலிலிருக்கும் திருக்கழுக்குன்றத்தை அடைந்து பின்னும் கிழக்காக கற்சாலைமார்க்கமாய் 9 மைல் தூரம் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

இது கடலோரத்திலுள்ள தொருஸ்தலம். சிறியகிராமம் சத்திரமும் ஹோட்டலுமில்லை. சந்நிதியிலும் பிரசாதம் கஷ்டம். சென்னையிலிருந்து மயிலாப்பூர் மார்க்கமாய் பாப்பான் சாவடியை அடைந்து படகேறி கெனல் மார்க்கமாயும் போகலாம். பட்டணத்திலிருந்து மஹாபலிபுரம் 35-மைல். சித்

திரைமாதம் விசாக நக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம்.

23-4-56 94 - திருவல்லிக்கேணி. 9-1-60 22.1.66

ப்ரபாவம்—ப்ருந்தாரண்யக்ஷேத்ரம். பார்த்தஸாரதிப்பெருமாள் ருக்மணி பிராட்டி, அநிருத்தர், ப்ரத்யும்நர், பலராமர், ஸாத்யகி ஆநந்த விமாநம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம். வ்யாஸ மஹரிஷியினால் ப்ரதிஷ்டிக்கப்பட்டு ஆத்ரேயமஹரிஷியினால் ஆரா திக்கப்பட்டவர். ஸுமதியென்னும் ராஜாவுக்கும் தொண்டைமான் சக்ரவர்த்திக்கும், அர்ச்சுநனுக்கும் ப்ரத்யக்ஷம்.

மந்நாதன் (ரங்கநாதன்) வேதவல்லித்தாயார், புஜங்கசயநம், ப்ர ணவவிமாநம், கிழக்கே திருமுகமண்டலம், கன்னிகாதானம் செய்து கொடுத்த ப்ருகுமஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

தெள்ளியசிங்கர் (நரசிம்மர்) தைவிகவிமாநம், வீற்றிருந்த திருக் கோலம், மேற்கே திருமுகமண்டலம். அத்ரிமஹரிஷிக்கும் ஜாலி மஹரிஷிக்கும் ப்ரத்யக்ஷமாய் மோக்ஷம் தந்தவர்.

சக்கரவர்த்தி திருமகன் (ஸ்ரீராமர்,) பரதாழ்வான், சத்ருக்னாழ் வான் லக்ஷ்மணர், மைதிலி புஷ்பகவிமாநம் தெற்கே திருமுகமண் டலம், நின்றதிருக்கோலம் :சசபதர்குமாரரானமதுமான் என்னும் மஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

தேவப்பெருமாள் கருடாரூடர், சேஷவிமாநம். கிழக்கே திரு முகமண்டலம், ஸப்தரோமாவுக்கு ப்ரத்யக்ஷம்.

இந்திர தீர்த்தம். ஸோமதீர்த்தம், மீநதீர்த்தம், அக்நிதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், இவ்வைந்து தீர்த்தங்களால் சூழப்பட்ட கைரவணி யென்னும் ஸரஸ்ஸு

ப்ருகு, அத்ரி, மரீசி, மார்க்கண்டேயர், ஸுமதி சப்தரோமா, ஜாலியென்னும் எழுமஹரிஷிகள் தவம்புரிந்தவிடம். பேயாழ்வார், திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது Madras சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 3-மைலிலும் எழும்பூர் ஸ்டேஷ

னிலிருந்து தென்கிழக்கே கற்சாலைமார்க்கமாய் 3-மைலிலும் இருக்கிறது. சென்னைப்பட்டணம் இந்த இராஜதானிக்கு முக்கிய பட்டணம். ஆகையால் சகலசௌகரியங்களுமுண்டு. அவசியம் பார்க்கத்தகுந்த விநோதமான பெரியபட்டணம்.

95 - கடிகை (கடிகாசலம்) (சோளசிங்கபுரம்.) 8-2-54 25.1.6

ப்ரபாவம்—யோகநரசிம்மர், அம்ருதவல்லி நாச்சியார், சிங்க கோஷ்டாக்ரு விமாநம், அம்ருததீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், சிறிய திருவடிக்கு ப்ரத்யக்ஷம். தக்கன அக்காரக்கனிப்பெருமாள் தக்கான்குளம், பேயாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது Madras சென்னைக்கு வடமேற்கே 40-மைலிலுள்ள சோளங்கிபுரம் ஸ்டேஷனுக்கு வடமேற்கே கற்சாலைமார்க்கமாய் 8-மைலில் இருக்கிறது. சத்திரங்களும் ஹோட்டல்களும், வண்டிகளும் உண்டு.

குறிப்பு: வியாதியஸ்தர்களும் பிசாசுபிடித்தவர்களும் இத்தலத்திற்கு சதாகாலம் வந்துகொண்டே இருக்கிறார்கள். இவ்விடத்தில் தீராத வ்யாதிகளும் நீங்காத பைசாசங்களும் இல்லை, நரஹரிஸ்வாமி இடம் ஸர்வஸ்வதந்த்ரங்களும்பெற்று தனிமலையின் மிசை எழுந்தருளியிருக்கும் ஆஞ்சநேய ஸ்வாமி சகல ரோகிகளின் ஸ்வப்நத்தில் வியாதியின் குணத்தைதெரிவித்துவிடுகிறார். இச்சந்நிதிக்குச் சமானமானது இப்புவியில் எங்குமில்லை என்னலாம்.

320-அடி உயரமுள்ள ஒருகுன்றின் மிசை நரஹரிஸ்வாமியும், 200-அடி உயரமுள்ள குன்றின்மிசை ஆஞ்சநேய ஸ்வாமியும் வீற்றிருக்கின்றனர். இது ஒரு சிறிய பட்டணம் ஊருக்குள்ளிருக்கும் சந்நிதியில் ஆதிகேசவப்பெருமாளும் உத்ஸவரும் எழுந்தருளியிருக்கின்றனர். ஊருக்கும் மலை

யடிவாரத்திற்கும் 1½-மைல். இத்தலத்திற்கு ஒரு மைல் தூரத்தில் எரும்பி அப்பா அவதார ஸ்தலமாகிய எரும்பி என்கிற கிராமமிருக்கின்றது.

தொண்டைநாட்டுத் திருப்பதிகள்.

முற்றுப்பெற்றன.

---

## வடநாட்டுத் திருப்பதிகள். (கஉ)

18-11-61

### 96 - திருவேங்கடம். (திருப்பதி)

30.1.66

ப்ரபாவம்—திருவேங்கடத்தான், ஸ்ரீநிவாசன், அலர்மேல் மங்கைத்தாயார், ஆநந்தநிலயவிமாநம், சேஷாசலம், ஸ்வாமிபுஷ்கரணி. கோனேரிதீர்த்தம் பாபவிநாசதீர்த்தம், ஆகாசகங்கை கோகர்ப்பதீர்த்தம், குமாரதாரை கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம். தொண்டைமான் சக்ரவர்த்திக்கும் ஆறுமுகனுக்கும் ப்ரத்யக்ஷம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருப்பாணாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார, மங்களாசாஸநம்,

மார்க்கமும் வசதிகளும்-இது ரேணுகொண்டா ஸ்டேஷனுக்கு மேற்கே 6-மைலிலுள்ள திருப்பதி ஸ்டேஷனுக்கு வடக்கே ½-மைலில் இருக்கிறது. பட்டணத்திற்கும் மலையடிவாரத்திற்கும் 1-மைல் தூரம். மலைமிசையிருக்கும் திருப்பதி அடிவாரத்திலிருந்து 6-மைல் தூரத்திலிருக்கிறது. பர்வதாரோஹணஞ்செய்யும் மார்க்கமிதுவே. ஏழுமலைகளைத் தாண்டிச் செல்லவேணும். முதல் காலிகோபுரமலையும் ஆறாவது முழங்கால் முறிச்சி மலையும் ஏறுவது கஷ்டம். சந்திரகிரியிலிருந்து மங்காபுரமார்க்கமாய் ஐந்து மைலில் ஒரு மார்க்கமிருக்கிறது. மலை ஏறவேண்டியது ஒரு மைல்தான். இந்த

மார்க்கத்தில்தான் வண்டிகளும் யானைகளும் மற்றசசாமான் களும் திருமலைக்கு வருவது வழிபத்திரமில்லாததாலும் ஜல சௌக்கியமில்லாததாலும் ஜனங்கள் இவ்வழியாகப் போவ தில்லை. பாலுபல்லியிலிருந்தும் ஒரு வழியுண்டு.

இந்த ஸ்தலம் கீழ்த்திருப்பதி மேல்திருப்பதி என்று இரண்டு பிரிவுள்ள ஒருபெரிய பட்டணம். கீழ்த்திருப்பதி யில் கோவிந்தராஜன் சந்நிதி ஸ்ரீராமன் சந்நிதி முதலிய சந்நி திகளும் ஆழ்வார் தீர்த்தம் நரசிம்மதீர்த்தம் ராமதீர்த்தம் முதலிய தீர்த்தங்களும் சில மடங்களும் பலசத்திரங்களும் கடைவீதிகளும் ஹோட்டல்களும் இருக்கின்றன. வண்டி களுண்டு. மேல்திருப்பதியில் சத்திரங்களும் ராமாநுஜகூட முமிருக்கின்றன. ஹோட்டலில்லை. சந்நிதியில் பிரசாதம் விசேஷம். மலை எறுவதற்குடோலிகள் கூலிகள் முதலிய சகலசௌகரியங்களுமுண்டு வழியில்ஆங்காங்குத் தங்குவ தற்கு மண்டபங்களும் தண்ணீர்ப்பந்தல்களுமிருக்கின்றன.

## திருப்பதிஸ்தல விமர்சம்.

ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ள நந்தனபுரம் என்னும் ஊரில் புரந்தரன் என்னும் பிராமணோத்தமன் ஒருவன் இருந்தான். அவனுக்குமாதவன் என்னும் ஒரு குமாரன் பிறந்தான். அவன் ஒரு நாள் தன் மனைவி சந்திரரேகை என் பவளோடு பூஞ்சோலையிற் சென்று விளையாடிக்கொண்டிருந் தான். அப்போது மாலினி என்பாளொரு சண்டாள கன் னிகை ஆங்கு வர அவள் கட்டழகைக்கண்டு காமுற்று அவளைக் கூடி தன் மனைவியைத் துறந்து அவளுடனே சென்று பலநாள் கூடி இருந்தான். இப்படி அவன் அவ ளோடு புலால் தின்றும் கள் குடித்தும், கைப்பொருள் எல் லாவற்றையும் செலவழித்து பிறகு வழி பரித்தல், உயிர்

கொலை செய்தல் முதலிய பெரிய பாபங்களைப் புரிந்து திரவியம் சம்பாதித்து அவளுக்கு கொடுத்து வந்தான். முடிவில் அவன் வறியவனாகி பல நோய்களையும் அடைந்து அவளால் தூரத்தப்பட்டவனாய் பல பாவமும்தொடரப்பெற்று பித்தனாய் கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானகங்களில் அலைந்துத் திரிந்து கடைசியாய் திருமலையை அடைந்தான். இச்க்ஷேத்திரத்தை அணுகின மாத்திரத்தில் தனது தீவினை எல்லாம் சாம்பலாகப் பெற்று முன்னைய பிரமதேஜஸ்ஸை பெற்று நல்ல ஞானமடைந்து ஸ்ரீமந் நாராயணனை சேவித்து வழிபட்டு பரமபதம் அடைந்தான். அதனால் இத்திருப்பதி வேங்கடாசலம் என்னும் பெயர் அடைந்தது என்று வடமொழி பிரம்மாண்ட புராணத்திலும் பவிஷ்யோத்தர புராணத்திலும் கூறப் படுகிறது. தன்னை அடைந்தவர்களது பாவமனைத்தையும் ஒழிப்பதனால் "வேங்கடம் எனப்பெயர் பெற்றது. வேம் - பாவம். கடம்-எரித்தல் எனப்பொருள். இதனை "அத்திருமலைக்குச் சீரார் வேங்கடாசலமெனும் பேர், வைத்தனாதுவேதெ ன்னில்வேமென, வழங்கெழுத்தே, கொத்துறுபவத்தைக் கூறுங்கடவெனக் கூறிரண்டாஞ், சுத்தவக்கரங் கொளுத்தப்படுமெனச் சொல்வர்மேலோர்," "வெங்கொடும் பாவங்களெல்லாம் வெந்திடச் செய்வதானன், மங்கலம் பொருந்துஞ் வேங்கடமலையானதென்று" என்னும் புராணச் செய்யுட்களால் அறிக. அன்றியும், 'வேம் என்பது அழிவின்மை, கடம் என்பது-ஐச்வரியம்; அழிவில்லாத ஐச்வரியங்களை (தன்னை அடைந்தார்க்குத்) தருதலால் வேங்கடமெனப்பெயர் கொண்டது' என வராக புராணத்தில் சொல்லப்பட்டுள்ளவாறும் உணர்க. இனி தமிழ் மொழியாகவே கொண்டால், வெவ்வியகாடுகளை யுடையது எனப்பொருள் படும். கலியுகத்தில் இத்திருமலைக்கு இவ்வரலாற்றால்

திருவேங்கடம் என்றும் பெயர் வந்ததெனப் புராணம் கூறும்.

இவ்வாறு புராண ப்ரசித்தங்களாய் வேங்கடாத்திரி, அஞ்சனத்திரி, தர்மாத்திரி, சேஷாத்திரி, சிம்மாத்திரி, நாராயணாத்திரி, ஸ்ரீநிவாசாத்திரி, ரிஷபாத்திரி கருடாசலம், ஸ்ரீசைலம், சிந்தாமணிகிரி, என்றித்யாதி திவ்ய திருநாமங்களையுடையதாயும், பரமபதநாதனுக்கு வாசஸ்தானமாயும் விளங்கும் இத்திருப்பதியைச் சுப்பிரமணியஸ்தலமென்றும், உடையவர்பாம்பு உருவாகிக் கோமுகவழியாகச்சென்று ஸ்வாமிக்குச் சங்காழிகளையளித்து வைஷ்ணவஸ்தலமாக்கினை ரென்றும் சிலர் சொல்லுகிறார்கள்.

1. இவ்வேங்கடாசலத்தைப்பற்றி அஷ்டாதசபுராணங்களில் பத்துபுராணத்துள் நூற்றைம்பத்தாறு அத்தியாயங்களில் ஸ்ரீமந்நாராயணனது லீலாவிஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸ்காந்த புராணத்துள்மட்டும் முப்பது அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

2. ஸ்ரீ உடையவர் அவதரித்தகாலம் இற்றைக்கு 906 வருஷங்களாயின்றன. இவருக்கு முன் துவாபரயுகத்தில் அவதரித்த முதலாழ்வார்களும், கலிபிறந்து 43-வது நாளில் அவதரித்த நம் சடகோபரும் எல்லா ஆழ்வார்களுக்கும் கடைசியாய் அவதரித்தவரும் சைவஸமய குரவரான சம்பந்த ஸ்வாமிகளுக்குச் சமகாலத்தவரும், எம்பெருமானார் காலத்திற்குச் சுமார் 3000-வருஷங்களுக்கு முன்னால் அவதரித்தவருமாகிய, வீறுடைய நம்மங்கையர்கோனும் மங்களாசாஸநம் செய்திருக்கின்றார்கள். இவர்களால் பாடல்பெற்றுள்ள விஷ்ணுஸ்தலத்தைச் சிவஸ்தலமென்று சொல்வது யாதுகாரணமோ அறிகிலோம்.

3. திருவேங்கடம் வைஷ்ணவ ஸ்மார்த்தமதஸ்தர்களுக்கு முக்கிய ஸ்தலமாவதுமன்றி மாத்துவர்களுக்கும் முக்கிய ஸ்தலங்களாகிய எட்டில் அது ஒன்று. அவையாவன:-ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாத்திரி, தோத்தாத்திரி, நைமிசம், புஷ்கரம், சாளக்ராமம் வதரியாச்சிரமம். இவ்வெட்டும் விஷ்ணுஸ்தலங்களேயாம். இந்த அஷ்டஸ்வயம்பு ஸ்தலங்களில் ஒன்றாகிய இவ்வேங்கடாத்திரியைச் சிவஸ்தல மென்பது தகுமோ?

4. மேலும் ஸ்ரீபாசுராமருக்குத் திருத்தம்பியார் திரணதூமாக்கினி யென்பவர் அருளிச்செய்த தொல்காப்பியத்துக்கு, உரையாசிரியர் நச்சினார்க்கினியர் உரை யெழுதிய போது.

"வடவேங்கடந் தென்குமரி" என்றமுதற் சூத்திரத்துக்கு 'நிலங்கடந்த நெடுமுடியவண்ணலை நோக்கி உலகந் தவஞ்செய்து வீடுபெற்ற மலையாதலானும் எல்லாரும் அறியப்படுதலானும் வடவேங்கடத்தை எல்லையாகக்கூறினார்' என்று அறுதியிட்டனர். தைத்திரியம், பௌடிகம், தல்வாகாரம், சாமம் என்று பெயர்பெற்றிருந்த வேதத்தை, வேதவியாஸ பகவான் பரமக்ருபையாலே சிற்றறிவினோர் உணர்வதற்கு நான்கு கூறுசெய்து, இருக்கு, எசுர், சாமம் அதர்வணம் என்று சொல்லுவதற்கு முன்னமே தொல்காப்பியம் செய்யப்பட்டது. இதனை தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்துள் காண்க.

5. அன்றியும், புறச்சமயத்தார் செய்த பஞ்சகாவியத்துள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தில் "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்" என்று தமிழுக்கு எல்லை கூறுதலுமன்றி,

வீங்கு நீரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலத் தானத்து
மின்னுக் கொடியுடுத்து விளங்கு விற்பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகை பெறு தாமரை கையி னேந்தி
நலங் கிளராரமார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்றவண்ணமும்.

என்று அத்திருமலைமிசை எழுந்தருளியிருக்கும் பரம னது டடிகளை அதிக அழகாய் வருணித்திருப்பதையும் கண் டிலரோ? இதனை ஆராயாது ;குமரன்குன்றுதோருடலில் ஒன்று என்று சாதிப்பது நன்றோ?

6 கவிச்சக்கரவர்த்தியாம் கம்பர் கிஷ்கிந்தாகாண்டத்தில்,

வடசொற்குந் தென்சொற்கும் வரம்பிற்றாய்
நான்மறையு மற்றைநூலும்
இடைசொற்ற பொருட்கெல்லா மெல்லையதாய்
நல்லறத்துக் கீறாய்வேறு
புடைசுற்றுந் துணையின்றி புகழ்பொதிந்த
மெய்யே போற்பூத்துநின்ற
அடைசுற்றுந் தண்சாரலோங்கிய வேங்கடத்திற்
சென்றடைதிர்மாதோ.

கோடுறுமால்வரையதனைக் குறுகுதிரேலுங் கொடியகொடுமைநீங்கி
வீடுறுதிராதலினுன் விலங்குதிரப்புறத்து நீர்மேவுதொண்டை
நாடுறுதிருற்றதனை நாடியதற்பின்னையவை; நளிநீர்ப்பொன்னிச்
சேடுறுதண்புனற்றெய் வத்திருநதியினிரு கரையுஞ்சேர்தீர்மாதோ

வலங்கொணேமிமழைநிறைவானவ
னலங்குதாளிணை தாங்கிய வம்மலை
விலங்கும் வீடுறுகின்றன மெய்ந்நெறிப்
புலன்கொள்வார் கட்கனையது பொய்க்குமோ.

என்று திருமலையின் சிறப்பை அருளிச்செய்தார்.

ஆசிரியர் ஐயனரிதனரும்.

வெறிகொ ளறையருவி வேங்கடத்துச் செல்வி
னெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட்
கருளீயு ஞாலத்திடரெல்லா நீங்க
வருளீயு மாழியவன்

என்று புறப்பொருள் வெண்பாமாலையில் கூறியுளார்.

பாரதம் பாடிய பெருந்தேவனரும்,

தேனேங்கு நீழற் திருவேங்கட மென்னும்
வானேங்கு சோலைமலை என்றும்—தானேங்கு
தென்னரங்கமென்றுந் திருவத்தியூரென்றுஞ்
சொன்னவர்க்கு முண்டோ துயர்.

என்று அருளி செய்திருக்கின்றார்.

தேறிய வடகலை தென்கலை எனவிரண்
டாறெழு காங்க வரவிந்த லோசன
குளிர்பதமிடு சடகோப மீதெனவான்
வெளி முகடணி வடவேங்கடவாண
வதிகுரல் வளைசுடராழி யாமெனமதி
கதிர்புடை வரநிமர் கரிகிரி வாத
வலம்புரி போலயன் வாகன மீண்டிச்
சிலம்புறு தரளச்சிலம் பாற்றிறைவ
வெழுமணியால் கடலீந்த பொன்னுடனெரு
செழுமணி யுரமணி தெய்வசிகாமணீ
யுரனுடை மதலையு மிரணியனுரமொடு
சாமமும் வகிர்ந்தநரகரி ரூபா

பூமியில் சுரப்புன் பனிக்கினனெனு
நேமியம்பரம சாமிவாழி
யிரவினிலாடு மிறையணி யொளிக்க
வரவினிலாடு நின்னடி மலர்க்கியம்புவெ
னண்டகோடியையும் யினயுமுந்திப்
புண்டரீகத்துப் பொதிந்த தருணின்னை
நெஞ்சேனுமலருணிறுத்து மெய்யடியர்க்
கஞ்சுற்றஞ் சுற்றுங்கவர் தம்மைக்
கண்டவிடத்து நுங்காற்றுகளென்று
தொண்டுபட்டொழுகத் துணைசெய்
தண்டமிழ்ச் சங்கத்தனி யிறைவனே.

என்று வேப்பத்தூர் சங்கப்புலவரும் அருளிச்செய்திருக்கின்றனர்.

இவர்கள் எல்லோரும் ஸ்ரீராமானுஜர் காலத்துக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்தவர்கள் என்றுணர்க.

7. இது நிற்க, கௌரிகடாக்ஷம்பெற்ற காளமேகப் புலவர் தசாவதாரங்களையும் ஒரு வெண்பாவில் அடக்கிப் பாடுகையில்,

மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென்
இச்சையிலுன் சென்மமெடுக்கவா-மச்சாகூர்
மாகோலா சிங்காவாமா ராமாராமாரா
மாகோபாலா மாவாவாய்

என்று கூறியிருக்கின்றனர்.

சைவ எல்லப்ப நாவலர் அருணாசலபுராணத்தில்,

விருப்படியார் சொரிந்தவறு கலருடனே விழியிடந்த வேடர்காலிற்
செருப்படியுமுகந்தபிரான் காளத்திநகரமெனுந் தெய்வபூமி
பருப்பதமாகியும் விளங்குந்தன்னருக்கொழிக்குமலர்ப்பதுமையோடு
மருப்படியுந்துழாய்மார்பன் வடமலைமேவிருந்து கண்டுவணங்கமா
[தோ

என்று சொல்லியிருக்கின்றனர்.

சைவசித்தாந்தியாகிய துறைமங்கலம் சிவபிரகாசர் காளத்தி புராணத்தில்,

அரவணைச்செல்வன் வாழுமந்தமிழ் நிலத்தினெல்லைத்
திருமலைகண்டுகொண்டோர் செறிவினைத் தொடாறுக்கும்
பெருவரைகண்டிறைஞ்சி பிறங்குவெள்ளருவிதாழும்
பொருவருமேமகூடப் பொருப்பினை யினிதுகண்டான்.

என்று சொல்லியிருக்கின்றனர்.

ஆதி சைவராகிய கச்சியப்பசிவாச்சாரியார் கந்தபுராணத்தில்,

அண்டமன்னுயிரீன்றவளுடன் முனிவாகித்
தொண்டகங்கெழுசுவாமி தன்மால்வரைதுறந்து
மண்டுபாதலத்தேகியே யோர்குகைவழியே
பண்டுதான் வருவேங்கடகிரியையும் பார்த்தான்

என்றுகூறியிருக்கின்றனர். குமரன் குன்று தோருடல் அசுரவதாநந்தரம்நிகழ்ந்தது முன்னல்லவென்பதை இப்பாட்டாலறிக. இந்தப் ப்ரமாணங்களைக் கொண்டாவது வேங்கடகத்தை விஷ்ணுக்ஷேத்திரமென்றே கொள்ளலாமன்றோ?

8-ஆனால் 460-வருஷங்களுக்குமுன்னிருந்த அருணகிரிநாதர் திருப்புகழில்

வரிசேர்ந்திடுசேல்கணை யோவெனு
மிருள்போன்றிடு வேலையு நீலமும்
வடுவாங்கிடு வேல்விழி மாதர்கள் வலையாலே

வளர்கோங்கிள மாமுகை யாகிய
தனவாஞ்சையி லேமுகமாயையில்
வளர்மாந்தளிர் போனிற மாகிய வடிவாலே

இருள்போன்றிடு கார்குழனீழவி
னிழைசேர்ந்திடு பாயலின் மீதுற
வினிதாங்கனி வாயமுதூ றல்கள்                பருகாமுன்

எமதாந்தன மானவை போனபின்
எவர்வேண்டுவ ராகிலமேயினி
யிவைநீங்கிடவே யிருதாளினை                யருள்வாயே

கரிவாம் பரிதேர் திரள்சேனையும்
முடனாந் துரியோதன னுதியர்
அவர் மாண்டிடவே யொரு பாரத                மதிலேகிக்

கனபாண்டவர் தேர்தனிலேயெழு
பரிதாண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னுமரி                ரகுராமன்

திரை நீண்டிரை வாரியும் வாலியு
நெடுவான் பயின் மாமர மேழொடு
தெசமாஞ்சிரம் ராவணனார் முடி                பொடியாக

சிலைவாங்கிய நாரணனார் மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
திருவேங்கட மாமலை மேவிய                பெருமாளே.

என்று புகழ்ந்திருக்கின்றாரே! என்ன.

இவ்வளவு ப்ரபல ப்ரமாணங்களையும் புறக்கணித்து விட்டு ஒரு ஆண்டிப்பண்டாரப்பாட்டைக்கொண்டு சாதிப்பது நன்றோ? அவர்காலத்திலேயே இருந்த புதுவைத் தாதரும்.

பத்திக்குவரம்பாகியபார்த்தன்பலதீர்த்த
மத்திக்கெனுமெத்திக்கினுமாமென்றவையாடிச்
சித்திக்கொருவிதையாகியதென்னாட்டினையணுகித்
தத்திச்சொரியருவித்தடவரவக்கிரிசார்ந்தான்

இவ்வண் சொல்லியிருக்கின்றார். அவரும் மெய்ஞ்ஞாவலர். இவரும் செஞ்ஞாப்புலவர். இரண்டும் பொய்யில் பாடல்கள். அவ்வண் பாடியதற்குப் பரிகாரமென்? என்றால், "ஆனைமுகனேயானார் திருமருகனே, சேனையர் கோனாகவளஞ் செய்வோனே" என்று அருணாசலக்கவிராயர் சொல்லிய வண்ணம் அரங்கக்ஷேத்திரபாலகன் ஐங்கரனானதுபோல் அரவக்கிரிக்கு அறுமுகன் க்ஷேத்திரபாலகனுபினான் என் றுணரக்கடவர்.

கந்தன்வேங்கடக்காவலியற்றிடற்
கெந்தநோன் பியற்றிப்பெற்றனனென்னுச்
சிந்தைசெய்துபூச்சிந்திச்சென்றுடொறும்
வந்தித்தேத்தி வணங்குவர்மாதரே.

என்று திருவேங்கடமான்மியங்கூறும்.

வந்திக்கவந்தனைகொள்ளென்று கந்தனுமாதவரும்
சிந்திக்கவந்தனைவேங்கடநாத பல்சீவன்றின்னும்
உந்திக்கவந்தனைச் செற்றுயுனக்குறித்தாய்பின்னும்
புந்திக்கவந்தனைச் செய்தையர்வேட்கைபொருமென்னையே.

என்று திருவேங்கடத்தந்தாதியில் திவ்வியகவிபிள்ளைப் பெருமாள் அய்யங்காரும் அருளிச்செய்தனர். திருவேங்கட க்ஷேத்திரபாலகன் சுப்பிரமண்ணியனுகையால் அவனைத் துதித்திருக்கிறார் என்றுணரலாம்.

அல்லது வ்யாசமுனிவர் தாம் செய்தருளிய சைவபுரா ணங்களிலெல்லாம் அவை சத்தையாம் பொருட்டு ஸ்ரீராம கதையை சொல்லியிருத்தல் போல இவரும் அத்திருப்புக ழில் திருமாலைப்புகழ்ந் திருக்கலாமென்னத் தட்டில்லை. அரு ணகிரிநாதர் விசாகப்பெருமாள் அடியவராதலால் இத்திரு மலையிலுள்ள திருமாலை சுப்ரமண்யராகப்பாவித்து பாடினா ரென்றே சொல்லத்தகும்.

9-அங்ஙனமாயின் ஸ்ரீ உடையவர்காலத்தில் உத்தரித்த தாகச் சொல்லுவதற்குக்காரணமென்? என்னில் ஸ்ரீநிவாச னிடமிருந்த பக்தியுடையவனுயிருந்த தொண்டைமான் சக் கரவர்த்திக்கு விரோதி நிரஸனார்த்தமாக நேமிசங்கங்களைக் கொடுத்தருளிய சமயத்து தான், ஆச்ரிதாக்ஷணார்த்தமாய் எப்போதும் கைகழலா நேமியானுகையாலே கைவிடப் போகாத ஆழ்வார்களையும் கையிழந்திருப்பவன் காணீர்! என்று அவர்களை இழந்துள்ள கோலத்தைக்காட்டியருளா நின்றிடும் காலத்தில் வைஷ்ணவ சூசகமான சின்ன மில்லா மையால் சைவர்கள் அபகரித்துக்கொண்டார்கள். அக்காலத் தில் ஸ்ரீமத் உடையவர் அரசர் நூல் வல்லார்கள் முன்னிலை யில் நியாயபிரகாரத்தை நிரூபித்துச் சங்க சக்கரங்களைக் கோவிந்தனுக்குக்கொடுத்தருளி விஷ்ணுஸ்தலமென்றுமுடிவு பெற்றுக் கொண்டனரென்பார் பெரியோர்.

களிகொண்டெமக் கருள்வேங்கடவாவெதிகட்கரச
னளிகொண்டளித்தவளையாழி வாங்கினையற்புதமா
களிகொண்டபூங்குழற்பெண்ணாசாயினநங்கைசெங்கை
யொளிகொண்டவால்வளையாழிகைக் கொள்வதுசிதமன்றே

10. ஸ்ரீமந்நாதமுனிகளது குலதிலகராகிய திருவரங்கப் பெருமாளரையர் திருவேங்கடஞ்சென்று ஸ்ரீநிவாஸப் பெரு மாளைப் பணிந்துப் பண்ணிசைத்தாளத்தோடு சேவிக்கும் போது வேங்கடநாதன் திருவுளமுவந்து சிரக்கம்பஞ்செய்து பதின்மர்பாடிய பெருமானே என்றுபாடும்போது கம்பம் செய்யாமலிருந்தனர். அதுகண்டு அரையர் இதுகாறும் திருவுளமுவந்து சிரக்கம்பஞ்செய்தநீர் இப்போது யாதுகுற் றங்கண்டு அது செய்யாது ஒய்ந்தீர்! என்று தாளத்தால் திருமுடியில் மோதப்புகப் பரமகருணாநிதி அப்பேற்றை சோழியன் கெடுத்தான் (சோழியன் என்றது தொண்ட

ரடிப் பொடியாழ்வார். அவர் மங்களாசாஸநம் செய்யாமை யாலே வேங்கடநாதன் ஒன்பதின்மர்பாடிய பெருமானேயா வன். ஆழ்வார்கள் பதின்மரும் பாடிய பெருமான் அரங்க நாதன் ஒருவனே யாவான்) யான் என்செய்கோ? என்று பக் தரைச்சினம்போக்கியருளினன் என்னும் ஐதிஹ்யம்சான் றோர் செவிக்கு இன்னும் நல்விருந்தாயிராநின்றதிறே.

11. "பூர்வம் மகம்மேரு பர்வதத்தைக் கருடபகவான் எடுத்துக்கொண்டுபோகையில் அதில் ஒரு சிறுகுன்று தவறி விழுந்ததாகவும் அந்தக்குன்றுதான் இந்தத்திருமலை யென் றும், கலியுகம் பிறப்பதற்கு 28-யுகங்களுக்குமுன் கங்கா நதி தீரத்திலிருந்த ஸ்ரீமந்நாராணமூர்த்தி இந்தமலைக்கு எழுந் தருளியதாக ஒரு சாஸனத்தில் காணப்பட்டாலும் வேறொரு சாஸனத்தில் கிறிஸ்து பிறப்பதற்கு 3100-வருஷங்களுக்கு முன் இந்த மலையின் கோயில் கட்டப்பட்டதாகத் தெரிய வருகிறது. இக்கோயிலுக்கு மூன்று பிராகாரங்க ளிருக்கின் றன. முதல் பிராகாரம் பிரம்மாவினாலும், இரண்டாவது பிராகாரம் பரிக்ஷித்து மகாராஜாவினாலும் மூன்றும் பிராகா ரம் ஜனமேஜய மகா ராஜாவினாலும் கட்டப்பட்டு அநந்தரம் 600-வருஷங்கள் சென்றபின் மேல் விக்கிரமார்க்க மகாராஜ னால் ஜீர்ணோத்தாரணம் செய்யப்பட்டதாம். பிறகு சோழ ராஜாக்களினாலும் புதுப்பிக்கப்பட்டு தொண்டைமான் சக்கர வர்த்தியின் காலத்தில் சிறந்தோங்கிவந்தது." என்று நார்த் ஆர்காட் டிஸ்டிரிக்ட் மாயனுபலிலும் மற்றொரு சரித்திர புஸ்தகத்திலும் காண்கிறது.

12. "உனக்குப் பணிசெய்திருக்கும் தவமுடையேனி னிப்போயொருவன் தனக்குப்பணிந்து கடைத்தலை நிற்கை நின் சாயையழிவு கண்டாய்." என்றதேவதாந்தரபவநம்

செல்லாதவர்களும் 'திருவடிதன் நாமம் மறந்தும் புறந் தொழாமாந்தர்,' ஆகையாலேதேவதாந்தாபஜனத்தை கன விலும் காணுதவர்களுமாகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் சிவக்ஷேத் திரத்தை விஷ்ணுக்ஷேத்திரமாக்கிறைரென்பது அநுபபந்நம்

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால்—என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத் தானும்
அடிக்கமல மிட்டேத்து மங்கு.

க்ரந்த விஸ்தாபயத்தினுல் சுருங்கச்சொன்னோம்.

## 97 - சிங்கவேழ்குன்றம் (அகோபிலம்.) 17-11-6

31 : 1 : 6

ப்ரபாவம்—நரசிம்மன், லட்சுமிநாச்சியார், குகை விமானம், இந் திரதீர்த்தம், நரசிம்மதீர்த்தம், பாபநாசதீர்த்தம், கஜதீர்த்தம், பார்க்கவ தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், இரணியனை ஸம்ஹரித்து ப்ரஹ்லாதாழ்வாருக்கு அருள் செய்தவர். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

இந்த க்ஷேத்திரத்தில் நரசிம்மஸ்வாமி ஒன்பது மூர்த்தங்களாக எழுந்தருளியிருப்பதனுல் இதை நவ நரசிம்மம் என்றசொல்லப்படுகி றது. 1-லட்சுமி நரசிம்மம் (கீழ் அகோபிலம்) 2-சத்திராந்த நரசிம்ம, 3-யோகாநரசிம்மம் (இவைகள் தோடியினின்றும் கெடுகப்போகும் சாலையில் 1½-மைலிலிருக்கின்றன) 4-காரங்கி நரசிம்மம் (இது மேல் அகோபிலம் செல்லும் பாலதயிலிருப்பது) 5-உக்கிர நரசிம்மம் (மேல் அகோபிலம்) 6-பார்க்கவ நரசிம்மம் (கருடாத்ரியிலிருப்பது) 7-பர்முலிகி நரசிம்மம் (வேதாத்திரியிலிருப்பது) 8-வராக நரசிம் மம் 9-பிரஹ்லாத நரசிம்மம் (கந்தாத்திரியில் இருப்பன) அகோபில மலையைச் சுற்றி அநேக ஸந்நிதிகளும், தீர்த்தங்களுமிருக்கின்றன.

மார்க்கமும் வசதிகளும்—கடப்பைக்கு மேற்கே 24-மைலிலுள்ள எர்ரகுண்டலா ஸ்டேஷனிலிறங்கி வடக்கே 8-மைல் தூரத்திலுள்ள புரோதத்தூரையும், 18-மைல் தூரத்

திலிருக்கும் சாகல்மூர் என்னும் கிராமத்தையும் அடைந்து அங்கு நின்று பின்னும் 14-மைல் வடக்கே சென்றால் இத் தலத்தை அடையலாம். நந்தியால் ஸ்டேஷனிலிருந்தும் தெற்கே ருத்திராவரம் மார்க்கமாயும், 27-மைலிலுள்ள இத் தலத்தை அடையலாம். வண்டிகள் கிடைக்கும். ஸந்நிதி தவிர வேறு வசதிகள் கிடையா. பெரிய ஊர் அல்லவாகை யால் ஹோட்டல் முதலானவைகள் இல்லை. ஸந்நிதியிலும் பிரசாதம் அகப்படாது. ஜல சௌக்கியமில்லை.

21-2-61 98 - அயோத்தி. ✓

ப்ரபாவம்—சக்கரவர்த்தித் திருமகன், ரகுநாயகன், சீதாபிராட்டி, புஷ்கலவிமானம், பரமபத ஸத்யபுஷ்கரணி, சரயுநதி, வடக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், பாதாழ்வானுக்கும், தேவர்களுக்கும், முனிவர்களுக்கும், ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாடியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—இது காசிக்கு வடமேற்கே 128-மைலிலும் பிரயாகைக்கு வடக்கே 95-மைலிலுமுள்ள, O. R. Ry. அயோத்தி ஸ்டேஷனுக்கு தெற்கே 2-மைலில் சாயூநதியின் தீரத்திலிருக்கிறது. Fyzabad பைசபாட் ஸ்டேஷனுக்கு வடக்கே 6-மைலிலிருக்கிறது. நாட்டுக்கோட்டையார் சத்திரமும், அநேக தர்மசாலைகளும் இருக்கின்றன. வண்டிகளுண்டு.

குறிப்பு:—இங்கு அனுமான் ஸந்நிதி ஒன்று இருக்கிறது. வரப்பிரசாதியாகையால் அநேகர்கள் பல தேசத்தரசர்களுக்காக இவர் ஸந்நிதியில் ராமாயண பாராயணம் பண்ணிக்கொண்டு இருக்கிறார்கள். இச்சந்நிதியில் பார்க்கப்பயங்கரமாகவும் வேடிக்கையாகவும் கொழுத்தும் பருத்தும் அனேக வானரக்கூட்டங்கள் யாத்திரிகர்களிடம் தின்பண்டங்கள்

முதலியவைகளை வாங்கித்தின்றுகொண்டு வாசஞ்செய்துவருகின்றன. இச்சந்நிதிக்குச் செல்லும்போது அதிஜாக்கிரதையாய் போகவேனும். யாத்திரைக்காரர் சாயூவில் தீர்த்தமாடி தீர்த்த சிராத்த முதலிய செய்து ஜனனஸ்தானத்தையும் வாயுபுத்திரரையும் சேவிப்பர். மாருதியை உருத்திராவதாரமென்பர். பிரமனிடத்திலும் வாயுவுனிடத்திலும், அனந்தனிடத்திலும் உதித்த உருத்திரருக்கு முறையே வைகாரிக ருத்திரன் தைஜசருத்திரன் தாமத ருத்திரன் என்று பெயர். இங்ஙனம் ஸ்ரீவராகபுராணம் சாதுர்மாசிய மாஹாத்மியம் பதினுன்காம் அத்தியாயம் கூறும். மசூதியினுள்தான் ஸ்ரீராமன் ஜனனஸ்தான மிருக்கிறது. நம்மூர் ஸ்வாமியான யோகி பார்த்தசாரதி ஐயங்கார் சாயூநதி தீரத்தில் நம்தேயத்து ஸந்நிதிபோல் ப்ரதக்காக ஒரு ஸந்நிதி கட்டியிருக்கிறார். இங்கு தங்குவதே உத்தமம். அம்மாஜி மந்திரம் என்றால் எல்லோருக்கும் தெரியும். இவ்விடத்தில் சகல சௌகரியங்களுமுண்டு. அயோத்தி—இது முத்திநகர் ஏழினுள் முதலாவது. பழய நாகரீகமுள்ள பட்டணம் விசாலமான சாயு நதியின் தென்கரையிலிருக்கிறது. 11650 ஜனத்தொகையுள்ளது. இந்த பட்டணம் பூர்வத்தில் 96-மைல் விஸ்தீரணமுள்ளதாயிருந்ததெனச்சொல்லப்படுகிறது. பழய பட்டணம் அழிந்துபோய் விட்டதாயும் 2000 வருஷங்களுக்கு முன் விக்கிரமாதித்திய மகாராஜனால் பரிசோதிக்கப்பட்டு இப்போதுள்ள பட்டணம் நிர்மிக்கப்பட்டதென்றும் ஸ்ரீராமமூர்த்தியின் ஜன்ம ஸ்தானத்தையும் ஸ்வர்க்கத்வாரத்தையும் அழித்துவிட்டு அதனுடைய சாமான்களைக்கொண்டு அவ்விடத்திலேயே அவுரங்க சீப் என்ற மகம்மதிய அரசன் பெரிய மசூதியைகட்டி வைத்திருக்கிறானென்றும் சொல்லப்படுகிறது. இந்த மசூதியின் முன்பாகத்தில் ஸ்ரீராமபிரானு

க்கு ஒரு சிறிய கோயிலமைத்து ஸ்ரீராம மூர்த்தியின் ஜன்ம ஸ்தானமென்று பெயர் போகாமல் இப்போது ஆராதித்துக் கொண்டு வருகிறார்கள். இந்த பட்டணத்தில் வீடுகள் தோறும் ஸ்ரீராமபிரானை விக்கிரக ரூபமாய் எழுந்தருளப் பண்ணி ஆராதித்து வருகிறதைப்பார்க்கலாம். ஸரயூநதியில் கமடங்கள் அதிகம். ஆனால் அவைகளினால் ஸ்நானஞ்செய் பவர்களுக்கு உபத்திரவமில்லை. இப்பட்டணத்திற்கு மூன்று மைல் தூரத்தில் பைசபாத்துக்கு வடக்கே ஒரு மைலில் ஸரயூநதியில் குப்தார்காட் என்ற பெயருடைய ஸ்நான கட்டமிருக்கிறது. இவ்விடத்தில் ஒரு பெரிய அசோக வ்ருக்ஷமிருக்கிறது. இந்த குப்தார் காட்டில்தான் ஸ்ரீராமபிரான் மறைந்துவிட்டதாய் சொல்லப்படுகிறது. யாத்திரிகர்கள் விசேஷமாய் இந்த கட்டத்திற்குவந்து ஸ்நானஞ்செய்து போகுறார்கள். இந்த க்ஷேத்திரத்தில் நடைபெறும் ஸ்ரீராம நவமி உத்சவத்திற்குச் சுமார் ஐந்து லக்ஷம் ஜனங்கள் வந்து கூடுகிறார்கள். இத்தலத்தில் முக்கியமாகத் தரிசிக்கவேண்டிய ஸ்தானங்கள்:—

1. ஸ்ரீராமர் ஜனித்த கர்ப்ப ஸ்தாநம், 2. அயோத்தி பீடம், 3. ரத்நமண்டபம், 4. கனகமண்டபம், 5. தர்மஸ்தாநம், 6. அக்நிகுண்டம், 7. உத்யாவநம், 8, அகஸ்த்யாச்ரமம், 9. வசிஷ்ட ஸ்தாநம், 10. அனுமந்த குண்டம், 11. சுசேந்த்ரகுண்டம், 12. சீதா கூபம், 13. சக்கரதீர்த்தம், 14. ருணவிமோசனதீர்த்தம், 15. வால்மீகி தீர்த்தம், 16. நாராயண குண்டம், 17. தங்காராமர் முதலியவைகள்.

## 99 - நைமிசாரணியம்.

ப்ரபாவம்—தேவராஜன், ஸ்ரீஹரிலட்சுமி, புண்டரீக வல்லித் தாயார், ஸ்ரீஹரிவிமாநம், திவ்யவிச்ராந்த தீர்த்தம், நேமிதீர்த்தம், கோமுதிநதி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம்,

தேவரிஷிகளுக்கும் இந்திராதிகளுக்கும் சுதருமனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். வியாசருக்கும் சுகருக்கும் சூத புராணிகருக்கும், தனித்தனி சந்நிதிகளிருக்கின்றன.

மார்க்கமும் வசதிகளும்—இது Lucknow-Balamu ஜங்ஷன்களுக்கு மத்தியிலுள்ள Sandila சாண்டிலா ஸ்டேஷனுக்கு வடக்கே 25-மைலிலிருக்கிறது. பதரிகாச்ரமம்சென்று திரும்பி வருபவர்கள் கத்கோடம் Kathgodam ஸ்டேஷனுக்குவந்துரயிலேறி லால்குவா (Lalkua)பாரியில்லி (Bareilly) சஹஜான்பூர் (Sahajanpur) சிதாபூர் (Sitapur) மார்க்கமாய் வந்து சிதாபூர்-பலாமு ஜங்ஷன்களுக்கு மத்தியிலுள்ள (Nimisar) நைமிசாரணியம் ஸ்டேஷனிலிறங்கினல் மேற்கில் 2-மைல். வண்டிகளுண்டு தர்மசாலைகளிருக்கின்றன.

குறிப்பு;—இங்கு ஸ்ரீவானமாமலை மடமும் இராமாநுஜகூடமுமிருக்கின்றன. பெருமாள் வநரூபியாய் சேவை சாதிக்கிருர். அதற்குத்தான் திருவாராதனம் முதலானவைகள் நடக்கின்றன. சூதபுராணிகர் மடமுமிருக்கின்றது. தாலபத்திர ஸ்ரீகோசங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன.

## 100 - சாளக்கிராமம்.

ப்ரபாவம்—ஸ்ரீமூர்த்திப்பெருமாள். ஸ்ரீதேவி நாச்சியார், கநக விமாநம், சக்கரதீர்த்தம், கண்டகிநதி. வடக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், கண்டகி என்கிற வேசிக்கும் பிரமருத்திராதிகளுக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார், திருமங்லையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்—அயோத்தியிலிருந்து மன்காபூர் Mankapur) கோரக்பூர் (Gorakhpur) காப்டன் கஞ்ச் (Captain Ganj) சிடேனிகாட் (Chtihauni) Ghat) பகஹா (Bagaha) நர்காதியா கஞ்ச் (Narktia Ganj) மார்க்கமாய்

பிக்னுதோரீ (Bhikna thoree வரையில் ரயிலில் வரவேண்டும். காசியிலிருந்தும் பாட்னி, கோரக்பூர் வழியாய் பிக்னு தோரிக்கு வரலாம். கயாவிலிருந்தும் பாட்னு பங்கிபூர் முஜர்பர்பூர் ரக்ஜால் மார்க்கமாய் பிக்னுதோரீக்கு வரலாம். பிக்னுதோரீ வரையில் ப்ரிடிஷ் ராஜ்யம். இதுவரையில்தான் ரயில் மார்க்கம். இது முதற்கொண்டு நேபாள ராஜ்யம்.

பக்னுதோரீயிலிருந்து கத்மந்து (Katmandu)) 80-மைல் 10-நாள் ப்ரயாணம். இங்கிருந்து சாளக்கிராமம் 10-நாள் பிரயாணம் மாசிமாத மஹாசிவராத்திரி தினத்தில் கத்மந்துவிலிருக்கும் பசுபதிநாத் ஈஸ்வரனை சேவிப்பதற்காக அனேக ஜனங்கள் வருகிறார்கள். இதை சேவித்துக்கொண்டு அனேக ஜனங்கள் சாளக்கிராமம் போகிறார்கள். அந்தகாலத்தில் அவர்களுடன்போவதே உத்தமம். மற்றைய காலங்களில் இராஜா அநுமதிவேண்டும். 50-பேர் சேர்ந்தாலொழியபோவதற்கு அநுமதி கிடைக்கமாட்டாது. வழியில் கடைகளாவது சௌகரியங்களாவது கிடையா. மனிதர்களைக்கொன்று தின்னும் காட்டு மனிதர்களின் பயமிகுதி. ஸ்ரீமந்நாராயணநகம்.

குறிப்பு:- இவ்விடத்தில் ஜலத்திலுலாவுகிற சாளக்கிராம விக்ரகங்கள் உத்தமம். குரிஜம் மத்திமம். அதை பார்த்து வாங்கவேண்டியது. நேபாளராஜாவின் உத்தரவின் பேரில்தான் பெருமாள் சேவை கிடைக்கும்.

### 101 - வதரியாச்சிரமம் (பதரிகாச்ரமம்)

ப்ரபாவம்—பதரி நாராயணன், அரவிந்தவல்லி, தப்தகுண்ட தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், இலந்தை மரத்தின்கீழ் பத்மாஸநனாகி ஞானமுத்திரை தரித்து ஜப சீலரான தபஸ்வியாய் நாலுக்கு மந்திரோபதேசஞ் செய்தவர். பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்-O. R. Ry. Hardwar ஹரித்வாரத்திலிருந்து 7-மைலில் சத்திய நாராயணம் (இங்கு சத்திய நாராயணன் சந்நிதியும் கருடன் சந்நிதியும் மூன்று தீர்த்தங்களுமிருக்கின்றன.) 15-வது மைலில் ஹ்ருஷிகேசம் (இங்கு ஹ்ருஷிகேசன் சீதாராமன் பரதன் சந்நிதிகளிருக்கின்றன. பெரிய தர்மசாலையும் ஆயுர்வேத வைத்யசாலையும் தபால் தந்தி ஆபீசும் பெரிய கடைகளுமிருக்கின்றன. இங்கு நின்றுதான் மலை ஏறுவதற்கு வண்டி ஜப்பான் முதலியவைகள் பேசி அமர்த்திக்கொள்ளவேண்டும். இமயமலையை இங்கு நின்று நன்று தரிசிக்கலாம். அரித்வாரத்திலிருந்து ஹ்ருஷிகேசம் வரையிலும் வண்டிகளும் மோட்டார்வண்டிகளும் ஓடும்) இங்கிருந்து 2-மைலில் அதாவது 17-வது மைலில் தபோவநம் (இங்கு சாதுக்கள் அனேகம் பேர் இருக்கிறார்கள்.) 18-வது மைலில் லட்சுமணஜூலா (ஜூலா-ஊஞ்சல் சிற்றாறுகளைக் கடப்பதற்கு கட்டியிருக்கும் வாராவதி ஊஞ்சல் மாதிரி ஆடிக்கொண்டிருக்கும். இங்கு லட்சுமணர் சந்நிதியிருக்கிறபடியால் லக்ஷ்மணஜூலா என்றுபெயர். லக்ஷ்மிநாராயணன் சத்க்ருஹ்வான் சந்நிதியுமிருக்கின்றன) $20\frac{1}{2}$-மைலில் கருடசட்டி. (சட்டி-தங்குமிடம்) 26-மைலில் மோஹனசட்டி, 27-வது மைலில் சோடாபிஜிலி (சிறிய ஏற்றம்) 29-வது மைலில் படாபிஜிலி (பெரிய ஏற்றம்) 35-மைலில் பந்தர் சட்டி, 38-மைலில் மஹாதேவசட்டி, 42-வது மைலில் ராமசட்டி, 49-மைலில் வியாசகாட் (வ்யாசர் ஆச்ரமம்) 51-வது மைலில் சாஹுரி (இராமர், லட்சுமணர், சீதா சந்நிதி) 58-வது மைலில் தேவ ப்ரயாகையும் இருக்கின்றன.

தேவப்ரயாகை என்பதுதான் 102-வது திருப்பதியான கண்டமென்னும் கடிநகர் (இது ஒரு பெரிய கிராமம். தபாலாபீசும், வைத்தியசாலையும் எல்லாவித வஸ்துக்களும் விற்

க்கூடிய பல கடைகளுமிருக்கின்றன. ஆறுகள் கூடுமிடத்தி ற்கு ப்ரயாகை எனப்படும். இங்கு விஷ்ணு கங்கையும் பாகீ ரதீ கங்கையும் ஒன்றுசேறுகின்றது. மலைமிசை பலவிடங்களி லும் உற்பத்தியாகி ஓடிவரும் உபநதிகளுக்கெல்லாம் கங்கை என்றே சொல்லப்படுகிறது. இவ்விடத்திலிருந்து கங்கோத்ரி ஜம்னோத்திரி உத்தரகாசி இவைகளுக்குப்போகும் வழிகள் பிரிகின்றன) இங்கிருந்து 3-மைலில் அதாவது 61-வது மை லில் பிந்தகோடி, 65-வது மைலில் ராணிபாக், 69-வது மை லில் ராம்பூர், 73-வது மைலில் பில்கேதார், 77-வது மைலில் ஸ்ரீநகரமும் இருக்கின்றன. (இது ஒரு பெரிய கிராமம். எல்லா வசதிகளுமுண்டு. பல கடைகளும் தபால் தந்தி ஆபீசுகளும் ஆஸ்பத்திரியுமுள. சக்தி நாராயணன், நாரதர், கருடன், சந்நிதிகளிருக்கின்றன.) 81-வது மைலில் சுக்ரதா 87-வது மைலில் கக்ரா (ஏற்றம்) 89-வது மைலில் நர் கோடா (ஏற்றம்) 93-வது மைலில் குலாவுராயி (ஏற்றம் இற க்கம்) 95-வது மைலில் ருத்திரபரயாகை (ஏற்றம்)யும் இருக் கின்றன. (இது மந்தாகினி அளகநந்தா சங்கமம். மந்தாகினி கேதாரத்தில் கோமுகத்தில் உற்பத்தி. ருத்திரமூர்த்தி ப்ர ஹ்மஹத்தி தோஷ பீடிதராய் இருந்த காலை இச்சங்கமத்தில் பலவாண்டுகளிருந்தமையால் இதற்கு ருத்திர ப்ரயாகை எனப் பெயராயிற்று.இங்கு நின்று பதரிகேதாரத்திற்கு வட க்குநோக்கி வழிபிரிகிறது. இவ்வழியாக அகஸ்தியமுநி குப்த காசி த்ரியுகிநாராயணம் இவைகளை கடந்துசென்றால் கௌரி குண்டத்தை அடையலாம்)

கௌரிகுண்டம் என்பது அநேக தங்காவதம் என்னும் சிவத்தலம் இதற்கு வடக்கே 4-மைலில் திருக்கேதாரமென் னும் சிவத்தலமிருக்கிறது. இந்தமலை 22850 அடி உயரமுள் ளது. இதற்கு மேற்கே கங்கோத்திரியும் அதற்கு வடகிழ

க்கே 80-மைலில் திருக்கயிலாய மூமிருக்கிறது. கயிலையை நோடித்தான்மலை என்று சைவசமய குரவர்கள் பாடியி ருக்கிறார்கள். இந்த மலை 20230 அடி உயரமுள்ளது. கங் கோத்திரிக்குச்செல்லும் யாத்திரிகர்கள் திரும்பிவருகிறார் கள். கங்கோத்திரியிலிருந்து கயிலைக்குச் செல்லும் பக்தர் கள் திரும்புவதில்லை.

102-வது மைலில் சிவாநந்தி (இங்கு சத்திய நாராய ணன் சந்நிதியிருக்கிறது) 107-வது மைலில் நகராஜ் 111-வது மைலில் சடாபீபல் (இங்கு உத்திராதிமடமிருக்கிறது) 115-வது மைலில் கர்ணப்ரயாகை (இது அகளநந்தாவும் பிண்டாரியும் கூடுமிடம். கர்ணன்கோயிலும், தந்தி தபாலா பீசுகளுமிருக்கின்றன.) 117-வது மைலில் உம்டா, 128-வது மைலில், நந்த ப்ரயாகை (இது விஷ்ணு கங்கையும், மந்தா கினி கங்கையும் கூடுமிடம். நந்தகோபர், யசோதை கண்ணன் சந்நிதிகளிருக்கின்றன. பெரிய கிராமம். எல்லா சாமான்களும் கிடைக்கும். தபாலாபீஸ் இருக்கிறது 136-வது மைலில் சமபோலி (இது பெரிய கிராமம் எல்லா வசதிகளுமுண்டு. தபாலாபீசும் ஆஸ்பத்திரியுமிருக்கின்றன. கங்கோத்ரி கேதாரம் போனவர்கள் இவ்விடம் வந்து (பதரிக்குப்போகவேண்டும்) 145-மைலில் பீபல்கோடி ஏற் றம். தபாலாபீஸ் இருக்கிறது) 149-வது மைலில் கருட கங்கா (இது கருடன் 11000 வருஷம் தவமிருந்தபோது அவனுடைய மூக்கிலிருந்து ஒரு தாரையோட அது கருட கங்கை எனப் பெயராயிற்று) 164-வது மைலில் ஜோசிமடம் (இதுகுபோன் தபசு செய்த இடம். இங்கு எல்லாவஸ்துக் களும் அகப்படுகின்றன. விலையும் குறைவு நரசிம்மதார, பல ராமர் சந்நிதி இருக்கின்றன குளிர் அதிகம்.)

ஜோசிமடமென்பதுதான் 103-வது திருப்பதியாகிய திருப்பிரிதி.

166-வதுமைலில் விஷ்ணு ப்ரயாகை (இது அளகநந்தாவும் விஷ்ணு கங்கையும் சேருமிடம். ஒரு காலத்தில் நாரத பகவான் கங்கையில் ஸ்நானம் செய்யும்போது விஷ்ணுமூர்த்தியின் விக்கிரகம் அவர்கையில் வர அதைக் கொண்டுவந்து இங்கு ப்ரதிஷ்டிப்பித்து தபசு செய்துகொண்டிருந்தமையால் இதற்கு விஷ்ணு ப்ரயாகை என்று பெயராயிற்று. விஷ்ணு நாரதர் சந்நிதிகளிருக்கின்றன.) 172-வது மைலில் பாண்டு கேசுவரம் (இங்கு வாசுதேவர் சந்நிதியிருக்கிறது. பதரியிலிருக்கும் உத்தவரை ஆறுமாதம் இவ்விடத்தில் யோகபதரி நாராயணர் சந்நிதியில் வைத்திருக்கிறார்கள். சித்திரை மாதம் சதுர்தசி தினம் ஷை உத்தவரை பதரிக்குக் கொண்டுபோய் சித்திரா பௌர்ணமி தினம்பதரி நாராயணப் பெருமாள் சந்நிதி திறக்கும்போது அப்பெருமாளுடன் எழுந்தருளப் பண்ணுகிறார்கள்) 178-வது மைலில் அனுமான் சட்டி (அனுமார் சந்நிதியிருக்கிறது) 183-வது மைலில் பதரி நாராயணம் இருக்கிறது. இந்தகிரி 23210 அடி உயரமுள்ளது. இந்த ஐந்து மைலும் மலை ஏறுவது கஷ்டம். வழி இடக்காயும் கஷ்டமாயும் பனிக்கட்டிமேல் நடக்கவேண்டியதாயுமிருக்கும். இங்கு தந்தி தபாலாபீஸ்களும், ஆஸ்பத்திரியும் எல்லா சாமான்களும் விற்கக்கூடிய பலகடைகளுமிருக்கின்றன.

அக்னிபகவான் ஜலரூபமாய்ப் பெருமாள் திருவடியினின்று புறப்பட்டு தப்தகுண்டம் என்னும் பெயருடன் வெளிக்குவருகிறார். அதற்குத்தான் தப்தகுண்ட தீர்த்தம் என்று பெயர். அதில் தீர்த்தமாடினால் எல்லாப்பாபத்தினின்றும் விடுபடுவார்களென்று சொல்லப்படுகிறது. சென்றவுடன் அதில் ஸ்நானம் செய்யலாகாது. ஸ்நானம் செய்தால் உடனேசுரம் வரும்.

ஆசையால் நாரதகுண்டமென்னும் சீத சுனையில் நீராடின பிறகு தப்தகுண்டமென்கிற அக்னிசுனையில்நீராடவேண்டும். பண்டாக்கள் வீடுகளில் தங்குவது மத்திமம். சந்நிதிபோத்தி மார்கள் வீடுகளில் தங்கினால் நமக்கு எல்லா சௌகரியங் களுமுண்டு. பிரம்மகபாலத்தில் பிண்டம் போடத்தளிகை செய்வதற்கு ஒரு ரூபாய் கொடுக்கவேண்டும். இங்கி ருந்து பிரம்மகபாலம் ½ மைலில் இருக்கிறது. இவ்விடத்தி லிருந்து 5 மைல் தூரத்தில் வசுதாரா இருக்கிறது. அங்கு பாபிகள்மேல் ஒரு துளி ஜலமும் விழாதென்றும் புண்ணிய புருஷர்கள் மேல் தான் விழுமென்றும் சொல்லப்படுகிறது.

இத்தேவாலயத்து பரிஜனக் கொத்துகள் யாவரும் பனி காலம் வரும்போது அதாவது ஐப்பசிமாதம் பௌர்ணமி யில் அபிஷேகாதிகளுடன் வெண்ணெய்ப் பூச்சிட்டு, பூஜை செய்து தான்யாதிகளை எல்லாம் பூமிக்குள் புதைத்துவிட்டுப் போய் சமீபகிராமங்களாகிய பண்டிகேசுவரம் முதலிய விடங்களிலிருந்து பனிகாலம் கழிந்த பிறகு அதாவது சைத்திரா பௌர்ணமியில் சந்நிதி கதவங்களைத் திறந்து பூஜைகள் செய்து வந்து வசிப்பர். இக் காரணத்தினால் தான் இந்த க்ஷேத்திரத்தில் மானுட பூஜை ஆறுமாத மென்றும் தேவபூஜை ஆறுமாத மென்றும் சொல்லப்படுகிறது. மேற் படி பனிக்காலத்தில் தேவஸ்தானங்கள் முதலியவை முற்றி லும் பனியால் உருத்தெரியாமல் மூடப்பட்டிருக்கும். மூடப் பட்டிருக்கிற ஆறுமாதகாலத்து தேவபூஜை நடத்தப்படு கின்றதென்பதற்கு சாக்ஷியாக அர்ச்சகர்கள் ஐப்பசி பௌர் ணமியில் பூஜித்த புஷ்பங்கள் சிறிதும் வாடாமல் சித்திரா பௌர்ணமியில் காணப்படுகின்றன. அப்போது ஏற்றிவைத்த ஜோதி என்னும் திருவிளக்கு அணையாமல் எரிந்துக்கொண் டிருப்பது ஆச்சரியம் இது உண்மை. இதை தரிசிப்பதற்

காகவே நாற்றுக்கணக்கான சநங்கள் முன்னமே வந்து காத துக் கொண்ருடிக்கிறார்கள்.

இறங்கும் மார்க்கம்.—பதரி நாராயணத்திலிருந்து 67 மைலிலுள்ள கருணப்பிரையாகை (ஆதிபதரி 12 மைல்), ராம்கங்காசட்டி (22 மைல்), துவாரகா காட் (10 மைல்), தர்மசாலா (25 மைல்) பீமண்டலசட்டி (23 மைல்), மார்க்கமாய் Katgoodam காட்கூடம் (8 மைல் மொத்தம் 167 மைல்) ரயில் ஸ்டேஷனுக்கு வரவேண்டும். காட்கூடத்திலிருந்து புகைரதமேறி Sandila சாண்டிலாவில் இறங்கி நைமிசாரண்யம் போவார்கள்.

மற்றொரு மார்க்கம்—கருணப்ரயாகையிலிருந்து 12-மைலிலுள்ள ஆதிபதரி 29 மைலிலுள்ள சவுரி. (இது கார்வால் ஜில்லாவுக்கும் ராம்நகர் ஜில்லாவுக்கும் எல்லை. சகல சவுகரியங்களுமுண்டு.) 37 மைபிலிலுள்ள சொகுடியா 53 மைலிலுள்ள ஜெனுலா 58 மைலிலுள்ள சிர்கூடா மார்க்கமாய் 100 மைலிலுள்ள ராம்நகர் (Ramnagar) ஸ்டேஷனை வந்து அடையலாம். பதரியிலிருந்து ராம்நகர் 167 மைல். இரண்டு மார்க்கங்களிலிலும் மிருகசஞ்சார மிருப்பினும் பயமில்லை. யாத்திரைக்காரரை அவைகள் ஒன்றுஞ்செய்வதில்லை. திருடர்கள் பயமுமில்லை.

102. கண்டமென்னும் கடிநகர். (தேவப்பிரயாகை)

ப்ரபாவம்.—நீலமேகப் பெருமாள், புருஷோத்தமன், புண்டரீகவல்லி நாச்சியார் மங்களவிமாநம், மங்களதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், பாத்வாஜமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார், மங்களாசாஸநம். விஷ்ணுகங்கை பாகிரதிகங்கை சங்கமம்.

மார்க்கமும் வசதிகளும்—இது Hardwar அரித்துவாரத்திலிருந்து இமயமலையின்மேல் 58-மைலிலிருக்கிறது. பதரி நாராயணம் மார்க்கத்தைப்பார்க்கவும்.

## 103. திருப்பிரிதி (ஜோஷிமடம்)

ப்ரபாவம்.—பரமபுருஷன், பரிமளவல்லி நாய்ச்சியார், கோவர்த்தனவிமாநம், இந்திரதீர்த்தம், கோவர்த்தனதீர்த்தம், மானஸஸரஸ்ஸு. கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், பார்வதிக்கு ப்ரத்யக்ஷம், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது Hardwar அரித்துவாரத்திலிருந்து 164 மைலிலும், தேவப்பிரயாகையிலிருந்து 106-மைலிலும் இருக்கிறது. வதரிமார்க்கம் பார்க்கவும்.

## 104. துவாரகை. 25-10-68

ப்ரபாவம்—கல்யாண நாராயணன், கல்யாண நாச்சியார், அஷ்டமஹிஷிகள், ஏமகூடவிமாநம், கோமதிதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், வீற்றிருந்ததிருக்கோலம், த்ரௌபதிக்குப்ரத்யக்ஷம். நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது Bombay. பம்பாயிலிருந்து கடல் மார்க்கமாய் 180-மைலிலிருக்கிறது. இதுதான் மிகவும் சௌகரியமும், குறைந்த செலவுமுள்ள மார்க்கம். மாலை 8-மணிக்கு ஸ்டீமர் ஏறினால் மறுநாள்பகல் 12 மணிக்கு துவாரகையை அடையலாம். புகைவண்டி மார்க்கம் 550 மைல் இருக்கிறது. ஜங்ஷன்கள் பலவிருக்கின்றன. 2½ நாள் பிடிக்கும். பம்பாயிலிருந்து பரோடா மார்க்கமாய் அமடபாட் ஜங்ஷனை அடைந்து அங்கிருந்து தென்மேற்காய்ப்பிரியும் பாதையில் வீரங்கம், ஜடில்ஸார், ஜங்ஷன்களின் வழியாய் போர்பந்தர்ஸ்டேஷனில் இறங்கவேண்டும். போர்பந்தரென்பது குசேலப்பட்டணம் (சுதாம்புரி) குசேலஸ்வாமி ஸந்நிதியிருக்கிறது. இங்கு தங்குவதற்கு ஜாகைகளிருக்கின்றன. இங்கிருந்து சமுத்திரக்கரை மார்க்கமாய் கால்நடையிலாவது ஸ்டீமரிலாவது போகலாம். சுதாம்புரிக்கும் துவாரகைக்கும் 55-மைல் தூரமிருக்கிறது. இங்கிருந்து போவதற்கு மூன்றுநாள் பிடிக்கும். ஜலகஷ்டம். ஆங்காங்கு சந்நி

ரங்களுண்டு. துவாரகைக்கு ½ மைல் தூரத்தில் உத்தராதி ராமாநுஜ கூடமிருக்கிறது. வைஷ்ணவர்களுக்கு சௌக்கிய மான இடம்.

## 105. வடமதுரை.

ப்ரபாவம்.—கோவர்த்தநேசன், சத்தியபாமை, கோவர்த்தன விமாநம், இந்திரதீர்த்தம், கோவர்த்தன தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், இந்திராதி தேவர்களுக்கு ப்ரத்ய க்ஷம். நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களா சாஸநம்.

விச்ராந்திகாட்--இது இந்த க்ஷேத்திரத்தில் முக்கியமான ஸ்நாந கட்டம். இங்கு ஓர் நேர்த்தியான கட்டடம் கட்டி ஒரு சிறியகோயில்மைத்து கட்டடத்தின் முகப்பில் அனேக கண்டாமணிகளை கட்டி தொங்கவிட்டிருக்கின்ற னர். தினந்தோறும் மாலை 6 மணிக்கு இக்கட்டடத்தில் யமுனாநதிக்கு தீபாராதனை நடக்கிறது. இந்த அற்புதகாட் சியை தரிசிப்பதற்கு மாலை வேளையில் நூற்றுக்கணக்கான ஜனங்கள் வந்து திரண்டிருப்பார்கள்.

இங்கு தரிசிக்கவேண்டிய இடங்கள் கம்சார்ஜன் கோ ட்டை, கேசவாலயம், போத்ராகுண்ட், பங்கேதகாறு முதலிய வைகள்.

குறிப்பு:—மதுரா: இது முக்திநகர் எழினுள் இரண்டா வது. நாகரீகமடைந்த புராதனபட்டணங்களில் ஒன்று. இம் மதுராபுரியை குலச் சந்திர மஹாராஜன் ஆண்டுவந்த காலத் தில் கி. பி. 1017 வருஷத்தில் மகமத் குஜினிபடை எடுத்து வந்து 50 ஆயிரம் ஜனங்களை கொன்று பட்டணத்தை கொள்ளையடித்து பாழ்படுத்தி மஹாராஜாவின் 185 பெரிய யானைகளையும் பொன்பொருள் சொத்துக்களையும் எடுத்துக் கொண்டு மதுராபுரியிலுள்ள கோயில்களை எல்லாம் இடித்து விக்கிரகங்களையும், விலையுயர்ந்த ஆபரணங்களை எல்

லசம் கூட்டி 30 லக்ஷம் ரூபாய் சொத்துக்களோடும் 5000 இந்து ஆண் பெண் அடிமைகளோடும் தன்தேசம் சென்றா னென்றும், 1500 வருஷத்தில் சுல்தான் சிகந்தர் லோடி என் பவனால் மறுபடியும் மதுராபுரி அழிக்கப்பட்டதென்றும் 1661-ம் வருஷத்தில் அப்தன் அன்கபி என்பவனால் மூன்றாம் தடவை அழிக்கப்பட்டு கம்சனுடைய கோட்டைக்குள் கிருஷ்ணன் ஜனித்த இடத்தில் ஒரு பெரிய மஸ்ஜிதைக் கட்டிவைத்து அதை அடுத்த இடங்களை எல்லாம் கசாப்புக் கடைகளாக கட்டிவைத்தானென்றும், அரங்கசிப்பினால் நான்காவதாக இந்து தேவாலயங்கள்யாவும் அழிக்கப்பட்டு இந்தபட்டணத்திற்கு இஸ்லமாபாத் என்று பெயரிடப்பட்ட தென்றும் 1669-ம் வருஷத்தில் ஜீஹாங்கிர் சக்கரவர்த்தி 36 லக்ஷம் ரூபாய் செலவு செய்து கட்டியிருந்த கேசவ தேவா லயத்தை இடித்து பாழாக்கி அதிலிருந்த விக்கிரகங்களை யும், மற்றப்பொருள்களையும் ஆக்கிராவுக்குக்கொண்டு போய் நபாப்குதசியாபீசம் மஸ்ஜிதுக்குப் போட்டானென்றும் 1707-ம் வருஷத்தில் அரங்கசிப் மாண்டபின் மதுராபுரி மறுபடியும் ஜாடஸ் என்னும் பரதவராஜன் வசமாகியதென் றும் 1803-ம் வருஷத்தில் இது ஆங்கிலேயர்வசமாகியதென் றும் அங்கு தங்கள் சேனைகள் தங்க கண்டோன் மெண்டு கட்டப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது.

மார்க்கமும் வசதிகளும்—இது Delhi டெல்லிக்குத் தெற்கே 80-மைலிலுள்ள (Muttra) மதுரா ஸ்டேஷனுக்குச் சமீபமாய் யமுனாநதியின் கரையிலிருக்கிறது. இத்தலத்திற்கு வடக்கே 6-மைலில் பிருந்தாவனமும், கிழக்கே 4-மைலில் கோகுலமும் தெற்கே 9-மைலில் கோவர்த்தனகிரியு மிருக் கின்றன. இவ்விடத்தில் தர்மசாலைகள் அதிகம். எல்லாசௌ கரியங்களுமுண்டு.

## 106. திருவாய்ப்பாடி. (கோகுலம்)

ப்ரபாவம்—நவமோகந க்ருஷ்ணன், ருக்மணிபிராட்டி, ஸத்திய பாமை நாச்சியார், ஹேமகூடவிமாநம், யமுநாநதி, கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், நந்தகோபனுக்கு ப்ரத்யக்ஷம். குல சேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களா சாஸனம்.

மார்க்கமும் வசதிகளும்—இது (Muttra) மதுரா ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கே ரோட்டு மார்க்கமாய் 4-மைல் தூரத்தில் யமுனை ஆற்றங்கரையில் ஒரு கிராமமாயிருக் கிறது. ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தி வளர்ந்த ஸ்தலம். பலராமன் அவதரித்தலம். எல்லாவித சௌகரியங்களும் உண்டு.

## 107. திருப்பாற்கடல்.

ப்ரபாவம்—க்ஷீராப்திநாதன், வ்யூகமூர்த்தி, கடல்மகள் நாச்சி யார், அஷ்டாங்க விமாநம், அம்ருததீர்த்தம், தெற்கே திருமுக மண் டலம், புஜங்கசயநம். ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ப்ரத்யக்ஷம். பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம் மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடி யாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸனம்.

இது யோகிகளும் முனிவர்களும் தேவர்களும் சென்று தங்கள் குறையிரக்குமிடம். அஸ்மதாதிகளுக்கு அதர்சநீயம். இதை MilkeySea என்றும் NorthPole என்றும் சில மேதாவிகள் சொல்லுகிறுர்கள்.

வடநாட்டுத் திருப்பதிகள் முற்றுப் பெற்றன.

---

## 108. பரமபதம்.

ப்ரபாவம்—பரமபதநாதன், பரவாசுதேவன், ஸ்ரீவைகுண்ட நாதன், பெரிய பிராட்டியார், அநந்தாங்கவிமாநம், விரஜாநதி, அயிரம் மதபுஷ்கரணி, ஸோமஸவநம், க்ஷவிளவிருக்ஷம், தெற்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், அநந்தகருட விஷ்வக்ஸேநர்

முதலிய நித்யஸூரிகளுக்கும், முக்தர்களுக்கும் ப்ராப்யஸ்தானம். பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், திருப்பாணாழ்வார், மங்களாசாஸநம்.

எல்லா வுலகங்களினும் மேம்பட்டு மேலிடத்துள்ளதாய், ஒப்புயர்வின்றி விளங்கும் இயற்கைப்பேரொளியுடையதாய், கமலக் கண்ணனது கருணைப்பெருக்கின் வடிவமான "விரஜை' யென்னும் விமலநதியை எல்லையாகப்பெற்றதாய் சிறுகாலையிலா நிலையோதிரியாகுறுகா நெடுகா குணம்வேறுபடா, உறுகால்கிளர் பூதமெலாமுகினும் மறுகாநெறி' என்றபடி கலை முஹூர்த்தம் முதலிய காலபரிணாமங்களும் நிலைவேறுபாடும் சுருக்கமும் பெருக்கமும் குணவேற்றுமையும் உற்பத்திவிநாசங்களுமின்றி என்று மொருபடிப்பட விருப்பதாய் அந்தமில்பேரின்பத்தை அநுபவிக்கும் இடமாய், மனமொழிகளுக்கு எட்டாத மஹிமையுடையது பரமபதம் என்கிற திவ்யலோகம்.

நூற்றெட்டுத் திருப்பதிகள் முற்றுப்பெற்றன.

ஸ்ரீமதே நாராயணாயநம:



# அநுபந்தம் I.

## 108 திருப்பதிகளின் மங்களாசாசன பாசுரத்திரட்டு.

### திருவரங்கம்.

துப்புடையாரை யடைவதெல்லாம்
சோர்விடத்துத் துணையாவரென்றே
ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன்
ஆனைக்குநீ யருள்செய்தமையால்
எய்ப்பென்னைவந்து நலியும்போது
அங்கேதும் நானுன்னைநினைக்கமாட்டேன்
அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தேன்
அரங்கத்தரவணைப் பள்ளியானே.

### உறையூர். திருக்கூடல்.

கோழியுங்கூடலும் கோயில்கொண்ட
கோவலரேயொப்பர் குன்றமன்ன
பாழியந்தோளுமோர் நான்குடையர்
பண்டிவர்தம்மையும் கண்டறியோம்
வாழியரோ விவர்வண்ணமெண்ணில்
மாகடல்போன்றுளர் கையில்வெய்ய
ஆழியொன்றேந்தி யோர்சங்குபற்றி
அச்சோவொருவரழகியவா.

### தஞ்சைமாமணிக்கோயில்.

எம்பிரானெந்தை என்னுடைச்சுற்றம்
எனக்கரசென்னுடைவாணாள்
அம்பினாலரக்கர் வெருக்கொளநெருக்கி
யவருயிர்செகுத்த வெம்மண்ணல்

வய்புலாஞ்சோலை மாமதின்தஞ்சை
மாமணிக்கோயிலே வணங்கி
நப்பிகாளுய்யநான் கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும்நாமம்.

## அன்பில்.

நாகத்தணைக்குடந்தை வெஃகாத்திருவெவ்வுள்
நாகத்தணையரங்கம் பேரன்பில்—நாகத்
தணைப்பாற்கடல்கிடக்கும் ஆதிநெடுமால்
அணைப்பார்கருத்தனவான்.

## கரம்பனூர். திருத்தண்காலூர்.

பேரானைக் குறுங்குடியெம்பெருமானை திருத்தண்கா
லூரானைக் கரம்பனூருத்தமனை முத்திலங்கு
காரார்திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டும்
ஆராதென்றிருந்தானைக் கண்டதுதென்னரங்கத்தே.

## திருவெள்ளறை.

வென்றிமாமழுவேந்தி முன்மண்மிசை மன்னரைமூவெழுகால்
கொன்றதேவநின் குறைகழல்தொழுவதோர்வகையெனக்கருள்புரியே
மன்றில்மாம்பொழில்நுழைதந்துமல்லிகைமௌவலின்போதலர்த்தி
தென்றல்மாமணம்கமழ்தாவரு திருவெள்ளறைநின்றானே.

## புள்ளம்பூதங்குடி.

வெற்பால் மாரிபழுதாக்கி விறல்வாளரக்கர் தலைவன்றன்
வற்பார்திரள்தோளைந்நான்கும் துணித்தவல்விலிராமனிடம்
கற்பார்புரிசைசெய்குன்றம் கவினார்கூடம் மாளிகைகள்
பொற்பார்மாடமெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே.

## திருப்பேர்நகர்.

கையிலங்காழிசங்கன் கருமுகில்திருநிறத்தன்
பொய்யிலன்மெய்யன் தன்தாளடைவரேல்அடிமையாக்கும்
செய்யலர்கமலமோங்கு செறிபொழில்தென்திருப்பேர்
மையரவிணையான்நாமம் பரவிநானுய்ந்தவாறே.

## திருவழுந்தூர்.

திருவுக்குந்திருவாகியசெல்வா!
தெய்வத்துக்கரசே! செய்யகண்ணா!
உருவச்செஞ்சுடராழிவல்லானே!
உலருண்டவொருவா! திருமார்பா!
ஒருவர்காற்றியுய்யும் வகையென்றால்
உடனின்றறைவரென்னுள்புகுந்து—ஒழியாது
அருவித்தின்றிடஅஞ்சிநின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே.

## சிறுபுலியூர்.

கருமாமுகிலுருவா கனலுருவா புனலுருவா
பெருமால்வரையுருவா பிறவுருவா நினதுருவா
திருமாமகள் மருவும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
அருமாகடலமுதே யுனதடியே சரணமே.

## திருச்சேறை.

கண்சோரவெங்குருதிவந்திழிய வெந்தழல்போல்கூந்தலாளை
மண்சேரமுலையுண்டமாமதலாய் வானவர்தம்கோவேயென்று
விண்சேரும்இளந்திங்களகடுரிஞ்சு மணிமாடமல்குசெல்வத் [ரே.
தண்சேறையெம்பெருமான் தாள்தொழுவார்காண்மின்என் தலைமேலா

## தலைச்சங்கநாண்மதியம்.

கண்ணார் கண்ணபுரம் கடிகை கடிகமழும்
தண்ணார் தாமலரசூழ் தலைச்சங்க மேல்திசையுள்
விண்ணோர் நாண்மதியை விரிகின்ற வெஞ்சுடரை
கண்ணாரக்கண்டுகொண்டு களிக்கின்றதிங் கென்றுகொலோ.

## திருக்குடந்தை.

ஆராவமுதேயடியேனுடலம் நின்பாலன்பாயே
நீராயலைந்துகரைய வுருக்குகின்றநெடுமாலே
சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை
ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் கண்டேன்எம்மானே.

## கண்டியூர்.

பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனைதிரிதந்துண்ணும்
உண்டியான் சாபந்தீர்த்த வொருவனூர்உலகமேத்தும்
கண்டியூர்அரங்கம் மெய்யம் கச்சி பேர்மல்லை யென்று
மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே.

## திருவிண்ணகர்.

என்னப்பன்எனக்காயிகுளாய் என்னைப்பெற்றவளாய்
பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பன்என்னப்பனுமாய்
மின்னப்பொன்மதில்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன்
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தனதாள்நிழலே.

## திருக்கண்ணபுரம்.

விடையேழன்றடர்த்து வெகுண்டுவிலங்கலுற
படையாலாழிதட்டப் பரமன்பரஞ்சோதி
மடையார் நீலம்மல்கும்வயல்சூழ் கண்ணபுரமொன்று
உடையானுக்கு, அடியேன்ஒருவர்க்குரியேனே.

## திருவாலி.

படைநின்றபைந்தாமரையோடு அணிநீலம்
மடைநின்றலரும் வயலாலிமணாளா
இடையநெறிந்த மரமேயொத்திராமே
அடையவருளாய் எனக்குஉன்தனருளே.

## திருநாகை.

பொன்னிவர்மேனிமரகதத்தின்
பொங்கிளஞ்சோதியகலத்தாரம்
மின்இவர்வாயில்நல்வேதமோதும்
வேதியர்வானவராவர்தோழி
என்னையும்நோக்கிஎன்னல்குலும்நோக்கி
எந்திளங்கொங்கையும்நோக்குகின்றார்
அன்னையென்னோக்கு மென்றஞ்சுகின்றேன்
அச்சோவொருவரழகியவா.

## திருநறையூர்.

சினவில்செங்கணரக்கருயிர்மாளச்
செற்றவில்லியென்றுகற்றவர்தந்தம்
மனமுட்கொண்டென்றுமெப்போதும்நின்றேத்தும்
மாமுனியைமரமேழெய்தமைந்தனை
நனவில்சென்றார்க்கும், நண்ணற்கரியானை
நான்அடியேன்நறையூர்நின்றநம்பியை
கனவில்கண்டேனின்றுகண்டமையாலென்
கண்ணிணைகள்களிப்பக்களித்தேனே.

## நந்திபுரவிண்ணகரம்.

தீதறுநிலத்தொடெரிகாலினொடு நீர்கெழுவிசும்புமவையாய்
மாசறுமனத்தினொடுஉறக்கமொடிறக்கையவையாயபெருமான்
தாய்செறவுளைந்துதயிருண்டு குடமாடு தடமார்வர் தகைசேர்
நாதனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே

## இந்தளூர்.

நும்மைத்தொழுதோம் நுந்தம்பணிசெய்திருக்கும்நும்மடியோம்
இம்மைக்கின்பம்பெற்றோம் எந்தாய்இந்தளூரீரே
எம்மைக்கடிதாக்கருமமருளி ஆவாவென்றிரங்கி
நம்மையொருகால்காட்டிநடந்தால் நாங்களுய்யோமே.

## திருச்சித்திரகூடம்.

மாவாயினங்கம்மதியாதுகீறி
மழைமாமுதுகுன்றெடுத்துஆயர்தங்கள்
கோவாய்நிரைமேய்த்துஉலகுண்டமாயன்
குலைமாகழல்கூடும்குறிப்புடையீர்
மூவாயிரநான்மறையாளர் நாளும்
முறையால்வணங்க அணங்காயசோதி
தேவாதிதேவன்திகழ்கின்றதில்லைத்
திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே.

## காழிச்சீராமவிண்ணகரம்.

ஒருகுறளாய்இருநிலம்மூவடிமண்வேண்டி
உலகனைத்துமீரடியாலொடுக்கி ஒன்றும்

தருவெனுமாவலியைச்சிறையில்வைத்த
  தாடாளன்தாளணைவீர், தக்ககீர்த்தி
அருமறையின்திரள்நான்கும்வேள்வியைந்தும்
  அங்கங்களவையாறுமிசைகளேழும்
தெருவில்மலிவிழாவளமுஞ்சிறக்கும் காழிச்
  சீராமவிண்ணகரேசேர்மினீரே

## கூடலூர்.

தாம்தம்பெருமையறியார் தூது
வேந்தர்காய வேந்தரூர்போல்
காந்தள்விரல் மென்கலைநன்மடவார்
கூந்தல்கமழும் கூடலூரே.

## திருக்கண்ணங்குடி,

வங்கமாமுந்நீர்வரிநிறப்பெரிய
  வாளரவணைமேவி
சங்கமாரங்கைத்தடமலருந்திச்
  சாமமாமேனியென்தலைவன்
அங்கமாறைந்துவேள்விநால்வேதம்
  அருங்கலைபயின்றெரிமூன்றும்
செங்கையால்வளர்க்குந்துளக்கமில்மனத்தோர்
  திருக்கண்ணங்குடியுள்நின்றானே.

## திருக்கண்ணமங்கை.

பெரும்புறக்கடலையடலேற்றினைப்
  பெண்ணையாணை, எண்ணில்முனிவர்க்கருள்
தரும்தவத்தை முத்தின்திரள்கோவையைப்
  பத்தராவியை நித்திலத்தொத்தினை
அரும்பினையலரை யடியேன்மனத்தாசையை
  அமுதம்பொதியின்சுவை
கரும்பினைக் கனியைச்சென்றுநாடிக்
  கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

## கவித்தலம்.

கூற்றமும் சாரா கொடுவினையும் சாரா தீ
மாற்றமும் சாரா வகையறிந்தேன்—ஆற்றங்
கரைக்கிடக்குங் கண்ணன் கடல்கிடக்கும் மாயன்
உரைக்கிடக்கும் உள்ளத் தெனக்கு.

## திருவெள்ளியங்குடி.

காற்றிடைப்பூளைகரந்தனவரந்தை
யுறக்கடலரக்கர்தம்சேனை
கூற்றிடைச்செல்லக்கொடுங்கணைதுரந்த
கோலவில்லிராமன்தன்கோயில்
ஊற்றிடைநின்றவாழையின்கனிகள்
ஊழ்த்துவீழ்ந்தனவுண்டுமண்டி
சேற்றிடைக்கயல்களுகள்திகழ்வயல்சூழ்
திருவெள்ளியங்குடியதுவே.

## மணிமாடக் கோயில்.

நந்தாவிளக்கேஅளத்தற்கரியாய்
நரநாரணனே கருமாமுகில்போல்
எந்தாய் எமக்கேயருளாயெனநின்று
இமையோர்பரவுமிடம் எத்திசையும்
கந்தாரமந்தேன் இசைபாடமாடே
களிவண்டுமிழற்றநிழல்துதைந்து
மந்தாரநின்று மணமல்குநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே.

## வைகுந்த விண்ணகரம்.

சலங்கொண்டவிரணியனதகல்மார்வங்கீண்டு
தடங்கடலைக்கடைந்தமுதங்கொண்டுகந்தகாளை
நலங்கொண்டகருமுகில்போல்திருமேனியம்மான்
நாள்தோறும் மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில்

சலங்கொண்டுமலர்சொரியும்மல்லிகையொண்செருந்தி
செண்பகங்கள்மணநாறும்வண்பொழிலினூடே
வலங்கொண்டுகயலோடி விளையாடுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே.

### அரிமேய விண்ணகரம்.

கன்றதனால்விளவெறிந்து கனியுதிர்த்தகாளை
காமருசீர்முகில்வண்ணன் காலிகள்முன்காப்பான்
குன்றதனால்மழைதடுத்துக் குடமாடுகூத்தன்
குலவுமிடம்கொடிமதிள்கள்மாளிகைகோபுரங்கள்
துன்றுமணிமண்டபங்கள்சாலைகள்தூமறையோர்
தொக்கீண்டித்தொழுதியொடுமிகப்பயிலும்சோலை
அன்றலர்வாய்மதுவுண்டுஅளிமுரலும்நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே.

### திருத்தேவனார் தொகை.

போதலர்ந்தபொழில்சோலைப் புறமெங்கும்பொருதிரைகள்
தாதுதிரவந்தலைக்கும் தடமண்ணித்தென்கரைமேல்
மாதவன்தானுறையுமிடம் வயல்நாங்கைவரிவண்டு
தேதெனவென்றிசைபாடும் திருத்தேவனார்தொகையே.

### வண்புருஷோத்தமம்.

கம்பமாகடலடைத்திலங்கைக்குமன் கதிர்முடியவைபத்தும்
அம்பினாலறுத்துஅரசவன் தம்பிக்களித்தவனுறைகோயில்
செம்பலாநிரைசெண்பகம்மாதவி சூதகம்வாழைகள்சூழ்
வம்புலாங்கமுகோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே.

### செம்பொன் செய்கோயில்.

பேரணிந்துலகத்தவர்தொழுதேத்தும் பேரருளாளனெம்பிரானை
வாரணிமுலையாள்மலர்மகளோடு மண்மகளுமுடன்நிற்ப
சீரணிமாடநாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே
காரணிமேகம்நின்றதொப்பானைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே

## திருத்தெற்றியம்பலம்.

மாற்றரசர்மணிமுடியும் திறலும்தேசும்
மற்றவர்தம்காதலிமார் குழையும்தந்தை
கால்தளையுமுடன்கழல வந்துதோன்றிக்
கதநாகங்காத்தளித்த கண்ணர்கண்டீர்
நூற்றிதழ்கொளரவிந்தம் நுழைந்தபள்ளத்
திளங்கமுகின்முதுபாளை பகுவாய்நண்டின்
சேற்றளையில்வெண்முத்தம் சிந்துநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே.

## திருமணிக்கூடம்.

தூம்புடைப்பனைக்கைவேழம் துயர்கெடுத்தருளிமன்னு
காம்புடைக்குன்றமேந்திக் கடுமழைகாத்தவெந்தை
பூம்புனல்பொன்னிமுற்றும் புகுந்துபொன்வரண்டஎங்கும்
தேம்பொழில்கமழுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே.

## காவளம்பாடி.

தாவளந்துலகமுற்றும் தடமலர்ப்பொய்கைபுக்கு
நாவளநவின்றங்கேத்த நாகத்தின்நடுக்கந்தீர்த்தாய்
மாவளம்பெருகிமன்னு மறையவர்வாழும்நாங்கைக்
காவளம்பாடிமேய கண்ணனேகளைகண்நீயே.

## திருவெள்ளக்குளம்.

கண்ணார்கடல்போல் திருமேனிகரியாய்
நண்ணார்முனைவென்றி கொள்வார்மன்னுநாங்கூர்
திண்ணார்மதிள்சூழ் திருவெள்ளக்குளத்துள்
அண்ணா அடியேனிடரைக்களையாயே.

## பார்த்தன்பள்ளி.

கவளயானைக்கொம்பொசித்த கண்ணனென்றும்,காமருசீர்க்
குவளைமேகமன்னமேனி கொண்டகோனென்னானையென்றும்
தவளமாடநீடுநாங்கைத் தாமரையாள்கேள்வனென்றும்
பவளவாயாளென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே.

## திருமாலிருஞ்சோலைமலை.

உனக்குப்பணிசெய்திருக்குந்தவமுடையேனினிப்போயொருவன்
தனக்குப்பணிந்துகடைத்தலையிற்கை நின்சாயையபழிவுகண்டாய்
புனத்தினைக்கிள்ளிப்புதுவவிக்காட்டி யுன்பொன்னடிவாழ்கவென்று
இனக்குறவர்புதியதுண்ணும் எழில் மாலிருஞ்சோலையெந்தாய்.

## திருக்கோட்டியூர்.

எங்களெம்மிறையெம்பிரானிமையோர்க்குநாயகனேத்தடியவர்
தங்கள்தம்மனத்துப்பிரியாதருள்புரிவான்
பொங்குதண்ணருவிப்புதஞ்செய்யப் பொன்களேசிதறுமிலங்கொளி
செங்கமலமலரும்திருக்கோட்டியூரானே.

## திருமெய்யம்.

பெண்ணாகியின்னமுதம்வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை
தண்ணார்ந்தவார்புனல்சூழ் மெய்யமென்னும்
தடவரைமேல்கிடந்தானைப் பணங்கள்மேவி
எண்ணானையெண்ணிறந்தபுகழினானை
இலங்கொளிசேராவிந்தப்போன்றுநீண்ட
கண்ணானை கண்ணாரக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே.

## திருப்புல்லாணி.

வவ்வித்துழாயதன்மேல் சென்றதனிநெஞ்சம்
செவ்வியறியாது நிற்குங்கொல் நித்திலங்கள்
பவ்வத்திரையுலவு புல்லாணிகைதொழுதேன்
தெய்வச்சிலையார்க் கென்சிந்தைநோய்செப்புமினே.

## திருமோகூர்.

தாளதாமரைத் தடமணிவயல்திருமோகூர்
நாளுமேவிநன்கமர்ந்துநின் றசுரரைத்தகர்க்கும்
தோளுநான்குடைச் சுரிகுழல்கமலக்கண்கனிவாய்
காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதியே.

## ஸ்ரீவில்லிபுத்தூர்.

மென்னடையன்னம்பரந்துவிளையாடும்
வில்லிபுத்தூருறைவான்றன்
பொன்னடிகாண்பதோராசையினாலென்
பொருகயற்கண்ணிணைதுஞ்சா
இன்னடிசிலொடுபாலமுதூட்டி
யெடுத்தவென்கோலக்கிளியை
உன்னொடுதோழமைக்கொள்ளுவன்குயிலே
உலகளந்தான்வரக்கூவாய்.

## திருக்குருகூர்.

ஒன்றுந்தேவுமுலகுமுயிரும்மற்றும் யாதுமில்லா
அன்றுநான்முகன்றன்னொடு தேவருலகோடுயிர்படைத்தான்
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள்
நின்றவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்நாடுதிரே.

## துலைவில்லி மங்கலம்.

குமிறுமோசைவிழவொலித்துலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு
அமுதமென்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர்
திமிர்கொண்டாலொத்துநிற்கும் மற்றிவள்தேவதேவபிரானென்றே
நிமியும்வாயொடுகண்கள்நீர்மல்க நெக்கொசிந்துகரையுமே.

திருந்துவேதமும்வேள்வியும் திருமாமகளிரும்தாம்மலிந்
திருந்துவாழ்பொருநல் வடகரைவண்துலைவில்லிமங்கலம்
கருந்தடங்கண்ணிகைதொழுதவந்நாள் துடங்கியிந்நாடொறும்
இருந்திருந்தரவிந்தலோசனவென்றென்றே நைந்திரங்குமே.

## சிரீவரமங்கை.

ஆறெனக்குநின்பாதமேசரணாகத் தந்தொழிந்தாய்உனக்கோர்கைம்
மாறுநானொன்றிலேன் எனதாவியுமுனதே
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலும்மலிதண்சிரீவரமங்கை
நாறுபூந்தண்டுழாய் முடியாய்தெய்வநாயகனே.

## திருப்புளிங்குடி.

காய்சினப்பறவையூர்ந்துபொன்மலையின்
மீமிசைக்கார்முகில்போல்
மாசினமாலிமாலி மானென்ற
அங்கவர்படக்கனன்றுமுன்னின்று
காய்சினவேந்தேகதிர்முடியானே
கலிவயல்திருப்புளிங்குடியாய்
காய்சினவாழிசங்குவாள்வில்
தண்டேந்தியெம்மிடர்கடிவானே.

## திருப்பேரை.

நகரமும்நாடும்பிறவும்தேர்வேன்
நாணெனக்கில்லையென்தோழிமீர்காள்
சிகரமணிநெடுமாடநீடு
தென்திருப்பேரையில்வீற்றிருந்த
மகரநெடுங்குழைக்காதன்மாயன்
நூற்றுவரை அன்றுமங்கநூற்ற
நிகரில்முகில்வண்ணன்நேமியானென்
னெஞ்சங்கவர்ந்தெனையூழியானே.

## ஸ்ரீவைகுந்தம். வரகுணமங்கை.

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்து
வைகுந்தத்துள்நின்று
தெளிந்தவென்சிந்தையகங்கழியாதே
யென்னையாள்வாயெனக்கருளி
களிர்ந்தசீருலகம்மூன்றுடன்வியப்ப
நாங்கள்கூத்தாடிநின்றூர்ப்ப
பளிங்குநீர்முகிலின்பவளம்போல்
கனிவாய்சிவப்பநீ காணவாராயே.

## திருக்குளந்தை.

கூடச்சென்றேன் இனியென்கொடுக்கேன்
கோல்வளைநெஞ்சத் தொடக்கமெல்லாம்
பாடற்றொழியவிழுந்துவைகல்
பல்வளையார்முன்பரிசழிந்தேன்
மாடக்கொடிமதிள்தென்குளந்தை
வண்குடபால்நின்றமாயக்கூத்தன்
ஆடல்பறவையுயர்த்தவெல்போர்
ஆழிவலவனையாதரித்தே.

## திருக்குறுங்குடி.

நம்பியைத்தென்குறுங்குடிநின்றஅச்
செம்பொனேதிகழும்திருமூர்த்தியை
உம்பர்வானவராதியஞ்சோதியை
எம்பிரானையென்சொல்லிமறப்பனே.

## திருக்கோளூர்.

வைத்தமாநிதியாம் மதுசூதனையேயலற்றி
கொத்தலர்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன
பத்துநூற்றுளிப்பத்தவன் சேர்திருக்கோளூர்க்கே
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே.

## திருவனந்தபுரம்.

கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்னநாளும்
கொடுவினைசெய்யும் கூற்றின்தமர்களும்குறுககில்லார்
விடமுடையரவில்பள்ளி விரும்பினான்சுரும்பலற்றும்
தடமுடைவயல் அனந்தபுரநகர்ப்புகுதுமின்றே.

## திருவண்பரிசாரம்

வருவார்செல்வார்வண்பரிசாரத்திருந்த என்
திருவாழுமார்வற்கென்திறம்சொல்லார்செய்வதென்
உருவார்சக்கரம்சங்குசுமந்திங்கும்மோடு
ஒருபாடுழல்வான் ஓரடியானுமுளனென்றே.

## திருக்காட்கரை.

வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்றவென்னையொழிய வென்னில்முன்னம்
பாரித்துதானென்னை முற்றப்பருகினான்
காரொக்கும் காட்கரையப்பன்கடியனே.

## திருமூழிக்களம்.

பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையார்க்கு
ஏந்துநீரிளங்குருகே ! திருமூழிக்களத்தார்க்கு
ஏந்துபூண்முலைபயந்தென்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப
தாம்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே.

## திருப்புலியூர்.

அன்றிமற்றோருபாயமென் னிவளந்தண்டுழாய்க்கமழ்தல்
குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி
தென்திசைத்திலதம்புரைக் குட்டநாட்டுத்திருப்புலியூர்
நின்றமாயப்பிரான் திருவருளாமிவள்நேர்பட்டதே.

## திருச்செங்குன்றூர்.

எங்கள்செல்சார்வுயாமுடையமுதம்
இமையவரப்பன்என்னப்பன்
பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும்
பொருந்துமூவுருவனெம்மருவன்
செங்கயலுகளும்தேம்பணைபுடைசூழ்
திருச்செங்குன்றூர்திருச்சிற்றாறு
அங்கமர்கின்ற ஆதியானல்லால்
யாவர்மற்றென்னமர்துணையே.

## திருநாவாய்.

கோவாகியமாவலியைநிலங்கொண்டாய்
தேவாசுரம்செற்றவனேதிருமாலே
நாவாயுறைகின்ற என்நாராயணநம்பீ
ஆவாவடியா னிவனென்றருளாயே.

## திருவல்லவாழ்.

காண்பதெஞ்ஞான்றுகொலோ வினையேன்கனிவாய்மடவீர்
பாண்குரல்வண்டினொடு பசுந்தென்றலுமாகியெங்கும்
சேண்சினையோங்குமரச் செழுங்கானல்திருவல்லவாழ்
மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்களே.

## திருவண் வண்டூர்.

வைகல்பூங்கழிவாய் வந்துமேயுங்குருகினங்காள்
செய்கொள்செந்நெலுயர் திருவண்வண்டூருறையும்
கைகொள்சக்கரத் தென்கனிவாய்ப்பெருமானைக்கண்டு
கைகள்கூப்பிச்சொல்வீர் வினையாட்டியேன்காதன்மையே.

## திருவாட்டாறு.

வாட்டாற்றான்அடிவணங்கி மாஞாலப்பிறப்பறுப்பான்
கேட்டாயேமடநெஞ்சே கேசவனெம்பெருமானை
பாட்டாயபலபாடிப் பழவினைகள்பற்றறுத்து
நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினமே.

## வித்துவக்கோடு.

தருதுயரந்தடாயேல் உன்சரணல்லால்சரணில்லை
விரைகுழுவுமலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே
அரிசினத்தாலீன்றதாயகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தேயழுங்குழவி யதுவேபோன்றிருந்தேனே.

## திருக்கடித்தானம்.

அற்புதன்நாராயணன் அரிவாமனன்
நிற்பதுமேவி யிருப்பதென்னெஞ்சகம்
நற்புகழ்வேதியர் நான்மறைநின்றதிர்
கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே.

## திருவாறன்விளை.

ஆகுங்கொல்ஐயமொன்றின்றி யகலிடமுற்றவுஞ்சீரடியே
ஆகும்பரிசுநிமிர்ந்த திருக்குறளப்பன்அமர்ந்துறையும்

மாகம்திகழ்கொடிமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை
மாகந்தநீர்கொண்டு தூவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலோ.

## திருவயிந்திரபுரம்.

வையமேழுமுண்டாலிலைவைகிய மாயவன் அடியவர்க்கு
மெய்யனாகியதெய்வநாயகனிடம் மெய்தகுவரைச்சாரல்
மொய்கொள்மாதவிசண்பகம் முயங்கியமுல்லையங்கொடியாட
செய்யதாமரைச்செழும்பணைதிகழ்தரு திருவயிந்திரபுரமே.

## திருக்கோவலூர்.

தாய்நினைந்தகன்றேயொக்க வென்னையும்
    தன்னையேநினைக்கச்செய்து தானெனக்
காய்நினைந்தருள் செய்யுமப்பனை
    அன்றிவ்வையகமுண்டுமிழ்ந்திட்ட
வாயனைமகரக்குழைக்காதனை
    மைந்தனைமதிள்கோவலிடைகழி
யாயனை அமரர்க்கரியேற்றையென்
    னன்பனையன்றியாதரியேனே.

## திருக்கச்சி.

அத்தியூரான்புள்ளையூர்வான் அணிமணியின்
துத்திசேர்நாகத்தின் மேல்துயில்வான்—முத்தி
மறையாவான்மாகடல்நஞ் சுண்டான்றனக்கும்
இறையாவான் எங்கள்பிரான்.

## அட்டபுயகரம்.

தொட்டபடையெட்டும் தோலாதவென்றியான்
அட்டபுயகரத்தா னந்நான்று—குட்டத்துக்
கோள்முதலைதுஞ்சக் குறித்தெறிந்தசக்கரத்தான்
தாள்முதலே நங்கட்குச்சார்வு.

## திருத்தண்கா.

பொன்னைமாமணியை அணியார்ந்ததோர்
மின்னைவேங்கடத்துச்சியில்கண்டுபோய்

என்னையாளுடையீசனை யெம்பிரான்
றன்னையாம்சென்று காண்டும்தண்காவிலே.

## வேளுக்கை.

அன்றிவ்வுலகமளந்த வசைவேகொல்
நின்றிருந்தவேளுக்கை நீணகர்வாய்—அன்று
கிடந்தானைக்கேடில் சீரானைமுன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமேகாண்.

## பாடகம்.

உற்றுவணங்கித்தொழுமின்உலகேழும்
முற்றும்விழுங்கும்முகில்வண்ணன்—பற்றிப்
பொருந்தாதான்மார்பிடந்துபூம்பாடகத்துள்
இருந்தானைஎத்துமென்னெஞ்சு

## நீரகம். நிலாத்திங்கள்துண்டம். ஊரகம். திருவெஃகா. காரகம். கார்வானம். கள்வனூர்.

நீரகத்தாய்நெடுவரை யினுச்சிமேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய்!நிறைந்தகச்சி
ஊரகத்தாய்!ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்!
உள்ளுவாருள்ளத்தாய்! உலகமேத்தும்
காரகத்தாய்!கார்வானத்துள்ளாய்! கள்வா!
காமருபூங்காவிரியின் தென்பால்மன்னு
பேரகத்தாய்!பேராதென் நெஞ்சினுள்ளாய்!
பெருமானுன்திருவடியே பேணினேனே.

## பவளவண்ணம்.

வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர்
மல்லையாய்! மதிட்கச்சியூராய்! பேராய்!
கொங்கத்தார்வளங்கொன்றையலங்கல்மார்வன்
குலவரையன்மடப்பாவையிடப்பால்கொண்டான்

பங்கத்தாய்பாற்கடலாய்பாரின்மேலாய்
பனிவரையினுச்சியாய்பவளவண்ணா
எங்குற்றுயெம்பெருமானுன்னைநாடி
யேழையேனிங்ஙனமேயுழிதருகேனே.

## பரமேச்சுர விண்ணகரம்.

சொல்லுவன்சொற்பொருள்தானவையாய்ச்
சுவையூறொலிநாற்றமும்தோற்றமுமாய்
நல்லரன்நான்முகன்நாரணனுக்கிடந்தான்
தடஞ்சூழ்ந்தழகாயகச்சி
பல்லவன்வில்லவனென்றுலகில்
பலராய்ப்பலவேந்தர்வணங்குகழல்
பல்லவன்மல்லையர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே.

## திருப்புட்குழி. திருவிடைவேந்தை.

அலங்கெழுதடக்கை யாயன்வாயாம்பற்கு
அழியுமாலென்னுள்ளமென்னும்
புலங்கெழுபொருநீர்ப்புட்குழிபாடும்
போதுமோநீர்மலைக்கென்னும்
குலங்கெழுகொல்லிக்கோமளவல்லி
கொடியிடைநெடுமழைக்கண்ணி
இலங்கெழில்தோளிக்கென்னினைந்திருந்தாய்
இடவெந்தையெந்தைபிரானே

## திருநின்றவூர்.

ஏற்றினை இமயத்துளெம்மீசனை
இம்மையைமறுமைக்குமருந்தினை
ஆற்றலை அண்டத்தப்புறத்துய்த்திடும்
ஐயனைக்கையிலாழியொன்றேந்திய

கூற்றினை குருமாமணிக்குன்றினை
நின்றவூர்நின்ற நித்திலத்தொத்தினை
காற்றினைப் புனலைச் சென்றுநாடி
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

## திருவெவ்வுள்.

முனிவன்மூர்த்திமூவராகி வேதம்விரித்துரைத்த
புனிதன்பூவைவண்ணனண்ணல்புண்ணியன்விண்ணவர்கோன்
தனியன்சேயன் தானொருவனாகிலும் தன்னடியார்க்கு
இனியனெந்தையெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே.

## திருநீர்மலை.

மாலுங்கடலாரமலைக்குவடிட்டு
அணைகட்டிவரம்புருவமதிசேர்
கோலமதிளாயஇலங்கைகெடப்படை
தொட்டொருகால்அமரிலதிர்க்
காலமிதுவென்றுஅயன்வாளியினால்
கதிர்நீண்முடிபத்தும் அறுத்தமரும்
நீலமுகில்வண்ணனெமக்கிறைவன்கிடம்
மாமலைபாவதுநீர்மலையே.

## திருக்கடன்மல்லை.

பண்ணாதவாளவுணரிடைப்புக்குவானவரைப்
பெண்ணாகியமுதூட்டும் பெருமானார்மருவினிய
தண்ணார்ந்தகடன்மல்லைத் தலசயனத்துறைவாரை
எண்ணாதேயிருப்பாரை யிறைப்பொழுதுமெண்ணோமே.

## திருவல்லிக்கேணி.

விற்பெருவிழவும்கஞ்சனும் மல்லும்வேழமும்பாகனும்வீழ
செற்றவன்தன்னைபுரமெரிசெய்தசிவனுறுதுயர்களைதேவை
பற்றலர்வீயக்கோல்கையில்கொண்டுபார்த்தன்தன்தேர்முன்நின்றானை
சிற்றவைபணியால்முடிதுறந்தானைத் திருவல்லிக்கேணிகண்டேனே.

## திருக்கடிகை.

மிக்கானைமறையாய்விரிந்தவிளக்கைஎன்னுள்
புக்கானைப்புகழ்சேர்பொலிகின்றபொன்மலையை
தக்கானைக்கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த
அக்காரக்கனியை அடைந்துய்ந்துபோனேனே.

## திருவேங்கடம்.

அகலகில்லேனிறையுமென் றலர்மேல்மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகமூன் றுடையா யென்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

## சிங்கவேழ்குன்றம்.

அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய் அவுணன்
பொங்கவாகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம்
பைங்கணானைக்கொம்புகொண்டு பத்திமையால் அடிக்கீழ்ச்
செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேழ்குன்றமே.

## திருவயோத்தி.

கற்பாரிராமபிரானையல்லால் மற்றும்கற்பரோ
புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும்
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே.

## நைமிசாரணியம்.

சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார்
திறத்தனாய்அறத்தையேமறந்து
புலன்படிந்துண்ணும்போகமேபெருக்கிப்
போக்கினேன்பொழுதினைவாளா
அலம்புரிதடக்கையாயனேமாயா
வானவர்க்கரசனேவானோர்
நலம்புரிந்திறைஞ்சும்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய்.

## சாளக்கிராமம்.

கலையும்கரியும்பரிமாவும் திரியும்கானம்கடந்துபோய்
சிலையும்கணையும் துணையாகச் சென்றான்வென்றிச்செருக்களத்து
மலைகொண்டலைநீரணைகட்டி மதில்நீரிலங்கைவாளரக்கர்
தலைவன் தலைபத்தறுத்துகந்தான் சாளக்கிராமமடைநெஞ்சே.

## வதரியாச்சிரமம்;

ஏனமுனாகியிருநிலமிடந்துஅன்று
இணையடியிமையவர்வணங்க
தானவனாகம்தரணியில்புரளத்
தடஞ்சிலைகுனித்தவென் தலைவன்
தேனமர்சோலைக்கற்பகம்பயந்த
தெய்வநன்னறுமலர்கொணர்ந்து.
வானவர்வணங்குங்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிரமத்துள்ளானே.

## கண்டங்கடிநகர்.

தந்தையைமுக்கும்தமையனைத்தலையும்
தடிர்ந்தவென் தாசரதிபோய்
எங்கும்தன்புகழாவிருந்தரசாண்ட
எம்புருடோத்தமனிருக்கை
கங்கைகங்கையென்றவாசகத்தாலே
கடுவினைகளைந்திடகிற்கும்
கங்கையின்கரைமேல்கைதொழநின்ற
கண்டமென்னும்கடிநகரே.

## திருப்பிரிதி.

பணங்களாயிரமுடையநல்லரவணைப்பள்ளிகொள்பரமாவென்று
இணங்கிவானவர்மணிமுடிபணிதர லிருந்தநவிமயத்து,மணங்கொள்
மாதவிநெடுங்கொடிவிசும்புற நிமிர்ந்தவைமுகில்பற்றிப்.பிணங்குபூம்
பொழில்நுழைந்துவண்டிசைசொலும் பிரிதிசென்றடைநெஞ்சே.

## துவாரகை.

ஆவலன்புடையார்தம்மனத்தன்றி
மேவலன்விரைசூழ்துவராபதிக்
காவலன்கன்றுமேய்த்துவிளையாடும்
கோவலன்வரில்கூடிடுகூடலே.

## வடமதுரை.

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்
சிற்றவேண்டா சிந்திப்பேயமையும்கண்டீர்களந்தோ
குற்றமன்றெங்கள்பெற்றதாயன்வடமதுரைபிறந்தான்
குற்றமில்சீர்கற்று வைகல்வாழ்தல்கண்டீர்குணமே.

## திருவாய்ப்பாடி.

நாணியினியோர்கருமமில்லை நாலயலாருமறிந்தொழிந்தார்,
பாணியாதென்னைமருந்துசெய்துபண்டுபண்டாக்கவுறுதிராகில்
மாணியுருவாயுலகளந்த மாயனைக்காணில்தலைமறியும் [திடுமின்
ஆணையால்நீரென்னைக்காக்கவேண்டி வாய்ப்பாடிக்கேயென்னையுய்த்

## திருப்பாற்கடல்.

வேதனைவெண்புரிநூலனை விண்ணோர்பரவநின்ற
நாதனைஞாலம்விழுங்குமநாதனை ஞாலந்தத்தும்
பாதனைப்பாற்கடல்பாம்பணை மேல்பள்ளிகொண்டருளும்
சீதனையேதொழுவார் விண்ணுளாரிலுஞ்சீரியரே.

## பரமபதம்.

தொண்டெல்லாம்பரவிநின்னைத்தொழுதடிபணியுமாறு
கண்டுதான்கவலைதீர்ப்பா னவதேபணியாயெந்தாய்
அண்டமாயெண்டிசைக்கு மாதியாய்நீதியான
பண்டமாம்பரமசோதி நின்னையேபரவுவேனே.

---

# அநுபந்தம் 1.

## ஆழ்வார்கள் ஒவ்வொருவரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருப்பதித்தொகை.

(1) திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள். ஸ்தலவரிசையில், 1, 2, 3, 5, 6, 7, 8, 9, 10, 11, 12, 13, 14, 15, 16, 17, 18, 19, 20, 21, 22, 23, 24, 25, 26, 27, 29, 30, 31, 32, 33, 34, 35 36, 37, 38, 39, 40, 41, 42, 43, 44, 45, 46, 47, 57, 62 63, 65, 66, 72, 73, 75, 76, 77, 78, 79, 80, 81, 82, 83, 84, 85, 86..87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 96, 97, 98. 99, 100, 101, 103, 104, 105, 106, 107, 108. ... ... ... ... ... ... 85.

(2) நம்மாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 8, 14, 16, 17, 41, 46, 49, 50, 51, 52, 53, 54, 55, 56, 57, 58, 59, 60, 61, 62, 63, 64, 65, 66, 67, 68, 69, 70, 71, 82, 96, 98, 104, 105, 107, 108. ... ... ... ... ... 36.

(3) பெரியாழ்வாரால் மங்மளாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1. 6, 8, 14, 17, 41, 42, 48, 57. 96, 98, 100, 101, 102, 104, 105, 106, 107, 108, 19.

(4) திருமழிசையாழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 4, 8, 14, 28, 42, 57,. 78, 81, 82, 90,94, 96, 107, 108. ... ... 15.

(5) பேயாழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 14, 16, 42, 75, 77, 78, 82, 94, 95, 96, 107, 108. ... ... ... 13.

(6) பூதத்தாழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 3, 14, 41, 42, 45, 73, 74, 78, 91, 93, 96, 107. ... ... ... ... 13.

(7) குலசேகராழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 17, 23, 69, 96, 98, 107.... 7.

(8) பொய்கையாழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 73, 82, 96, 107, 108. 6.

(9) தொண்டரடிப் பொடியாழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 98, 107. ... 3.

(10) திருப்பாணாழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதிகள் :—1, 96, 108. ... 3.

---

## திருப்பதிகள் இன்னின்ன ஆழ்வாரால் மங்களாசாசநம் செய்யப்பட்டன என்பது.

(1) ஆழ்வார்கள் பதின்மர்களால் மங்களாசாசநம் செய்யப்பட்டுள்ள திருப்பதி. 1-ஸ்ரீரங்கம். ... 1

(2) தொண்டரடிப் பொடியாழ்வவார் நீங்கலாக மற்ற ஆழ்வார்கள், ஒன்பதின்மார்களால் மங்களாசாசநம் செய்யப் பெற்றுள்ளது. 96-திருவேங்கடம் 107-திருப்பாற்கடல். 2. ×

(3) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்

வார், திருப்பாணாழ்வார், ஆகிய எழுவர் மங்களாசாசநம் 108-பரமபதம். ... ... ... 1

(4) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகிய அறுவர் மங்களாசாசநம். 11-திருக்குடந்தை. 1

(5) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகிய ஐவர் மங்களாசாஸநம். 82-திருவெஃகா. ... ... 1

(6) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், குலசேகராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் ஆகிய ஐவர் மங்களாசாசநம். 98-திருவயோத்தி. 1

(7) திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், ஆகிய ஐவர் மங்களாசாசநம். 42-திருக்கோட்டியூர். ... ... 1

(8) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார் திருமழிசையாழ்வார் ஆகிய நால்வர் மங்களாசாசநம், 8-திருப்பேர்நகர் 57-திருக்குறுங்குடி., 2

(9) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், குலசேகராழ்வார், ஆகியநால்வர் மங்களாசாஸநம். 17-திருக்கண்ணபுரம் ... ... ... 1

(10) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், பூதத்தாழ்வார், ஆகிய நால்வர் மங்களாசாசனம். 41-திருமாலிருஞ்சோலைமலை. ... ... ... 1

(11) திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், ஆகிய நால்வர் மங்களாசாஸநம். 78-பாடகம் ... ... ... 1.

(12) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவர் மங்களாசாஸநம். 16-திருவிண்ணகர். 1

(13) திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், ஆகிய மூவர் மங்களாசாஸநம். 73-திருக்கோவலூர். ... ... ... ... 1

(14) திருமங்கையாழ்வார், பேயாழ்வார் ,திருமழிசையாழ்வார் ஆகிய மூவர் மங்களாசாஸநம். 94-திருவல்லிக்கேணி. ... ... ... ... 1

(15) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆகிய மூவர் மங்களாசாஸநம். 104-துவாரகை. 105 வடமதுரை.... ... ... ... 2

(16) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், ஆகிய இருவர் மங்களாசாஸநம். 46-திருமோகூர். 62-திருமூழிக்களம். 63-திருப்புலியூர். 65-திருநாவாய், 66-திருவல்லவாழ். 5

(17) திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், ஆகியஇருவர் மங்களாசாஸநம். 3-தஞ்சைமாமணிக்கோயில். 45-திருத்தண்கால். 91-திருநீர்மலை. 93-திருக்கடன்மல்லை. 4

(18) திருமங்கையாழ்வார், பெரியாழ்வார் ஆகிய இருவர் மங்களாசாஸநம். 6-திருவெள்ளறை. 100-சாளக்கிராமம். 101-வதரியாச்சிரமம். 106-திருவாய்ப்பாடி. 4

(19) திருமங்கையாழ்வார், குலசேகராழ்வார், ஆகிய இருவர் மங்களாசாஸநம். 23-சித்திரகூடம். ... 1

(20) திருமங்கையாழ்வார், பேயாழ்வார், ஆகிய இருவர் மங்களாசாஸநம். 75-அட்டபுயகரம். 77-வேளுக்கை. 95-திருக்கடிகை. ... ... ... 3

(21) திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார், ஆகிய இருவர் மங்களாசாஸநம். 81-ஊரகம். 90-திருஎவ்வுளூர். ... ... ... ... 2

(22) பூதத்தாழ்வார் ஒருவர் மங்களாசாஸநம். 74-திருக்கச்சி. ... ... ... ... 2

(23) திருமழிசையாழ்வார் ஒருவர் மங்களாசாஸநம் 4-அன்பில் 28-கபித்தலம். ... ... 2

(25) பெரியாழ்வார் ஒருவர் மங்களாசாஸநம். 48-வில்லிப்புத்தூர். 102-கண்டமென்னும் கடிநகர், 2

(25) குலசேகராழ்வார் ஒருவர் மங்களாசாஸநம். 69-வித்துவக்கோடு. ... ... ... 1

(26) நம்மாழ்வார் ஒருவர் மங்களாசாஸநம் :—49, 50, 51, 52, 53, 54, 55, 56, 58, 59, 60, 61, 64, 67, 68, 70, 71. ... ... ... ... 17

(27) திருமங்கையாழ்வார் ஒருவர் மங்களாசாஸயம்:- 2, 5, 7, 9, 10, 11, 12, 13, 15, 18, 19, 20, 21, 22, 24, 25, 26, 27, 29, 30, 31, 32, 33, 34, 35, 36, 37, 38, 39, 40, 43, 44, 47, 72, 76, 79, 80, 83, 84, 85, 86, 87, 88, 89, 92, 97, 99, 10௪ ... ... ... 48.

ஆக மங்களாசாஸனமுள்ள ஸ்தலங்கள் 108.

---

# அநுபந்தம் - 2.

## 108. திருப்பதிகளின் குறிப்புகள்.

அஷ்டசுயம்பு ஸ்தலங்கள்:—ஸ்ரீரங்கம், திருவேங்கடம், சாளக்கிராமம், வதரியாச்சிரமம், ஸ்ரீவரமங்கை, நைமிசாரணியம், ஸ்ரீமுஷ்ணம், புஷ்கரம். இவைகளில் கடையிரண்டும் மங்களாசாஸநம் பெறாதவைகள்.

முத்திநகர் ஏழு:—அயோத்தியை, மதுரை, துவாரகை, காஞ்சி, அரித்துவாரம், அவந்திகை, காசி. கடைமூன்றும் மங்களாசாஸநம் பெறாதவைகள்.

காவிரி நதிக்கரையின்மேலுள்ள திருப்பதிகள்.—திருவரங்கம், உறையூர், அன்பில், கரம்பனூர், திருப்பேர்நகர், இந்தளூர், தலைச்சங்க நாண்மதியம், திருக்குடந்தை, கண்டியூர், கூடலூர், கவித்தலம், புள்ளம்பூதங்குடி.

கங்கையின் கரைமேலுள்ள திருப்பதிகள்:—நைமிசாரண்யம், வதரியாச்சிரமம், கண்டங்கடிநகர், திருப்பிரிதி.

சமுத்திரதீரத்திலுள்ள திருப்பதிகள்—திருவல்லிக்கேணி, திருவிடவெந்தை, திருக்கடன்மல்லை, திருநாகை, திருப்புல்லாணி திருவனந்தபுரம், துவாரகை.

மலைமேலுள்ள திருப்பதிகள்—திருவேங்கடம், சிங்கவேழ்குன்றம், திருநீர்மலை, திருக்கடிகை, வதரியாசிரமம் திருப்பிரிதி, சாளக்கிராமம், கடிநகர், திருத்தண்கால், திருக்குறுங்குடி.

மலைஅடிவாரத்திலுள்ள தலங்கள்—திருமாலிருஞ்சோலைமலை திருமெய்யம், நைமிசாரணியம்.

கட்டுமலைமேலுள்ள திருப்பதிகள்—அத்திகிரி, திருவெள்ளறை, திருப்பேர்நகர், திருநறையூர், திருக்கோட்டியூர், திருவாட்டாறு.

வடகலை திருமண்காப்பு பிரகாசிக்கும் திருப்பதிகள்-அஹோபிலம், அத்திகிரி, திருத்தண்கா, திருவெவ்வுளூர், திருவயிந்திரம், தேரழுந்தூர், திருக்குடந்தை ஆதனூர் புள்ளம் பூதங்குடி, திருவிண்ணகர், திருவெள்ளியங்குடி, திருக்கண்டியூர், தஞ்சைமாமணிக்கோயில்.

தாம்பரபர்ணி நதிக்கரை மேலுள்ள திருப்பதிகள்—திருக்குருகூர், ஸ்ரீவைகுண்டம், தொலைவில்லிமங்கலம், திருக்கோளூர், திருப்பேறை, திருக்குளந்தை.

சிவன்கோயிலைத் தன்னுள்பெற்ற ஸ்தலங்கள்—கரம்பனூர், திருக்கோட்டியூர், திருக்குறுங்குடி

சிவஸ்தலத்தினுள்ளிருக்கும் திருப்பதிகள்—தில்லை திருச்சித்திரகூடம், நிலாத்திங்கள்துண்டம், திருக்கள்வனூர்

சிவன்கோயில்களை வலமாகக்கொண்ட திருப்பதிகள்—திருமெய்யம், திருத்தண்காலூர்.

திருவாலி திருநகரி 12 திருப்பதிகள்—மணிமாடக்கோயில், வைகுந்த விண்ணகரம், அரிமேய விண்ணகரம், திருத்தேவனூர் தொகை, செம்பொன்செய்கோயில், திருமணிக்கூடம், திருத்தெற்றியம்பலம், காவளம்பாடி திருவெள்ளக்குளம், பார்த்தன் பள்ளி, தலைச்சங்க நாண்மதியம். வண்புருடோத்தமம்.

ஆழ்வார்திருநகரி நவத்திருப்பதிகள்—திருக்குருகூர், ஸ்ரீவைகுந்தம், வரகுணமங்கை, திருப்புளிங்குடி, திருக்

குளந்தை, திருக்கோளூர், திருப்பேரை, தொலைவில்லி மங்கலம். (2 திருப்பதி.)

நாங்கூர் ஆறு திருப்பதிகள்:—மணிமாடக் கோயில், வைகுந்த விண்ணகரம், அரிமேய விண்ணகரம், ~~வண்புருடோத்தமம்~~, திருத்தெற்றியம்பலம், செம்பொன் செய்கோயில்.

மண்டபசதுஷ்டயம்:—1. போகமண்டபம்-திருவரங்கம். 2 தியாகமண்டபம்-காஞ்சிபுரம். 3. புஷ்பமண்டபம்-திருவேங்கடம். 4. ஞானமண்டபம்-திருநாராயணபுரம் (இது மங்களாசாஸநம் பெறாதது)

நாக சதுஷ்டயம்:—வடயானை-திருவேங்கடம். தென்யானை திருமாலிருஞ்சோலைமலை. கீழ்யானை-திருக்கண்ணபுரம். மேல்யானை-திருமூழிக்களம்.

பஞ்சக்ருஷ்ணக்ஷேத்திரங்கள்—திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை, திருக்கண்ணங்குடி, கண்ணன் கபிஸ்தலம், திருக்கோவலூர்.

பரத்வாதிகளில் அநுபாவ்யமான குணங்களெல்லாம் பூர்ணமாய் அர்ச்சாவதாரத்தில் எண்டுமென்னுமிடம்.

1. கோயில்—வியூஹஸௌலப்யார்த ப்ரதானம்.

2. திருமலை—அந்தர்யாமி ப்ரதானம்.

3. திருக்குருகூர் —பரத்வலக்ஷணமான ஈச்வரத்வ ப்ரதானம்.

4. திருக்குறுங்குடி—விபவ ப்ரதாநம்.

5 ஸ்ரீவரமங்குலம்— திருவடிகளையே உபாயமாகக் கொடுக்குமிடம்.

6. திருக்குடந்தை—ரக்ஷகாந்தர ப்ரதிபத்தி நிவ்ருத்தி பிறந்தாரைச் சிதலாம்படி பண்ணுமிடம்.

7. திருவல்லவாழ்—அவனே ரக்ஷகனென்று அத்ய வ்வஸிக்கப்பண்ணுமிடம்.

8. திருவண்வண்டூர்—அநுகூலராலும் சலிப்பிக்க வொண்ணாதபடி யிருக்கும் அவனுடைய ஸ்தைரியகுணம் தோற்றுமிடம்.

9. திருவிண்ணகர்—விளம்பிக்கையாலே வந்த ப்ரணயரோஷத்தை அழிக்கவும், விருத்தங்களைக் கடிப்பிக்கவும் வல்ல சாமர்த்தியமுள்ள இடம்.

10. துலைவில்லிமங்கலம்—தந்தை தாயானபந்துத்தம் இரட்டித்திருக்கும் இடம்.

11. திருக்கோளூர்—ப்ராப்ய ருசி பிறந்தார்க்கு ப்ரவேஷ்டவ்யமா யிருக்குமிடம்.

12. திருப்பேரை—நெஞ்சை அபகரிக்கும் ஸௌந்தர்யமுள்ள இடம்.

13. திருவாறன்விளை—பாத்வத்தில் விமுகராகப் பண்ணுமிடம்.

14. திருக்குளந்தை—ஸ்திரீத்வ ப்ரகாரமான லஜ்ஜாதிகளை அழிக்குமிடம்.

15. திருவண்பரிசாரம்—ச்ரமத்தைக்கண்ட மநசான்று ப்ரமிக்கும்படியான ஸௌகுமார்யம் தோன்றுமிடம்

16. திருச்செங்குன்றூர்—பயசங்கிகளானவர்கள் நிர்ப்பயராய் த்ருஷ்டராம்படியான ஸௌந்தர்யாதிகள் தோன்றுமிடம்.

17. திருக்கடிதானம்—க்ருதக்யதா பரிமளம்தாய ப்ராப்தமான குணம் தோன்றுமிடம்.

18. திருப்புலியூர்— நாயகனுடைலக்ஷணம் காட்டு
டம்,

19. திருப்புளிங்குடி, வாகுணமங்கை, வைகுந்தம்—
மபக்தியாகிய பாகம் பிறக்குமளவும் அவனுக்கு உண்டா
வரை தெரியும்படி செய்யுமிடங்கள்.

20. திருநாட்கரை—போகத்தில் தட்டுமாறும் ஸௌ
யகுணம் தோன்றுமிடம்.

21. திருமூழிக்குளம்—ஆச்ரிதருக்கு ஸம்பத் தான
பாவம் காட்டுமிடம்.

22. திருநாவாய்—ஆச்ரித விஷயத்தில் கருபை தோன்
மிடம்.

23. திருக்கண்ணபுரம்—சரண வரணுர்ஹனுடைய
ாக்ஷப்ரதத்வம் தோன்றுமிடம்.

24. திருமோகூர்—தாபஹரமான குளிர்ச்சியுண்டாகு
டம்.

25. அநந்தசயநம்—தாரதம்யம் பராதே காட்டுகிற
ம்யம் தோன்றுமிடம்.

26. திருவாட்டாறு—ஆச்ரிதனுக்குப் பரதந்தரனகை
னுமிடம்.

27. திருமாலிருஞ்சோலைமலை—அஜ்ஞாநங்களைக் கடியு
டம்.

28. திருப்பேர்நகர்—அங்கீகரிக்கப் பார்க்கும் ஸ்வாமி
ம் தோன்றுமிடம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

முற்றும்.